உ

முருகா

# சிந்தனைத் தேன்

( 19 கட்டுரைகள் )






ஆசிரியர் :
கிருபானந்தவாரி

திருப்புகழமிர்தம் காரியாலயம்,
89, சிங்கண்ணசெட்டித் தெரு,
சிந்தாதிரிப்பேட்டை : : சென்னை—2.
1966

 [ விலை 0-5

...ரும் பதிப்பு—1966

## உள்ளுறை



பார்க்கர் அச்சகம், 11, பந்தர் தெரு, சென்னை-1.

உ

முருகா

# நூன்முகம்

---

இறைவனை இடையறாது சிந்தித்தல் வேண்டும். அவவண்ணம் சிந்திப்பார் சிந்தனையில் இறைவன் தேனூற நின்று இனிமை செய்வான்.

"கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
*சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று*"

என்பது மணிவாசகம்.

இத்திருவாசகத்தின்படி இறைவன் உள்ளுக்குள் தேனாய் இன்னமுதாய்த் தித்தித் தருள்புரிவான்.

தேன் தன்னில் கலந்த பொருளை நெடுநாட்களுக்குக் கெடாமல் வைக்கும் ஆற்றலுடையது. தேன் பல

நோய்களை நீக்கவல்லது. இறைவனுந் தேன் போன்றவன். தன்னை நினைக்கும் அடியவர்க்கு அழிவற்ற தன்மையைத் தந்து பிறவிப் பிணியை மாற்றுவன்.

அப் பரமபதியின் கருணையால் எழுந்தது இந்நூல். வண்டு பல மலர் களிலிருந்து தேனை எடுப்பதுபோல், பலகாலும் பல நூல்களைக் கற்றுங் கேட்டும் சிந்தித்தும் நின்ற சிந்தனையில் ஊறிய கருத்துக்கள் திரண்டு இச் சிறு நூலாக வருகின்றது.

இதனை அமைதியுடன் ஆழ்ந்து படிப் போர் நலமுறுவர்.

அன்பன்,

**கிருபானந்தவாரி.**

உ

முருகா

# சிந்தனைத் தேன்

## 1. அறிவு

அன்பர்களே!

நாம் தேடுகின்ற மாடு, மனைவி, மக்கள், வீடு, நில புலம், வண்டி, வாகனம், ஆடை ஆபரணங்கள் முதலிய யாவும், நாம் மரணமடைந்து இந்த உடம்பை விட்டுப் புறப்படும்போது உடன் வரமாட்டா. உடன் வராத இவைகளைத் தேடுவதிலேயே நம் வாழ்நாள் முழுவதையும் செலவழிப்பது தக்கதன்று.

நாம் இந்த உடம்பை விட்டுப் புறப்படும்போது நம்முடன் தொடர்ந்து வருவது அறிவு என்ற ஒன்றேயாகும். அறிவு பிறவிகள்தோறும் தொடரும். ஆகவே மற்ற பொருள்களைத் தேடித் திரிவதோடு நின்றுவிடாமல், நாம் அறிவையும் அவசியம் தேடிப் பெறவேண்டும்.

அறிவு என்ற ஒன்றிருந்தால் அவர்கள் எல்லாம் உடையவர்களாவார்கள். பொன்னிருந்தும், வீடு இருந்தும், மாடு இருந்தும், மனைவி மக்கள் இருந்தும், பிற என்ன இருந்தும் அறிவு என்ற ஒன்றில்லையானால் அவர்கள் அவமதிக்கப்படுவார்கள்.

"அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்"

என்கிறார் திருவள்ளுவதேவர்.

நாம் பலவகையான கருத்து வேற்றுமைகளை யுடையவர்களாக இருக்கின்றோம்; நாடு, மொழி, தொழில், சமயம், மதம், நடை, உடை, பழக்க வழக்கம் இவைகளில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக இருக்கின்றார்கள்.

ஆனால் ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் எல்லோருக்கும் கருத்து வேற்றுமை கிடையாது. அது எது? "துன்பந் தொலையவேண்டும்; இன்பம் பெருக வேண்டும்" என்றுதான் எல்லோரும் எண்ணுகின்றார்கள்.

'துன்பத்தை நீக்கவேண்டும். இன்பத்தை ஆக்கவேண்டும்' என்று சகலருங் கருதுகின்றார்களே யன்றி அதன் கார்ரண காரியத்தையறிந்து முயல்கின்றார்களில்லை,

துன்பத்திற்குக் காரணம் அறியாமை,

இன்பத்திற்குக் காரணம் அறிவு,

அறியாமை தேயத் தேய துன்பம் தொலையும்; அறிவு வளர வளர இன்பம் வளரும். இந்த நுட்பத்தை யறியாமல் பலர் பொன்னாலும் பொருளாலும் இன்பத்தை வளர்க்க நினைக்கின்றார்கள். அது நெருப்பை நெய்யினால் அவிக்க முயல்வதை நிகர்க்கும்.

மிகுந்த பொன்னும் பொருளும் உடையவர்கள் சதா சிந்தாகுலத்துடன் உழல்வதையும், ஆறுதல் இன்றி அல்லலடைவதையும் கண்கூடாகக் காண்கின்றோம்.

அறியாமை யகன்றாலன்றி துன்பந் தொலையாது என்று முன்னே கண்டோம். அறியாமையாலேயே துன்பங்கள் வருகின்றன என்றும் அறிகின்றோம்.

ஒரு விறகு வெட்டி ஒரு மரத்துண்டைப் பாதி பிளந்துவிட்டுப் பிளந்த பிளப்பில் ஒரு ஆப்பை வைத்துவிட்டுச் சென்றான். மறுநாள் வந்து மற்றப் பாதியைப் பிளக்க எண்ணினான். அதற்கு அநுகூலமாகவே அம்மரத் துண்டில் ஆப்பு வைத்தான்.

ஒரு குரங்கு அங்கு வந்து அம் மரத்தின் பிளப்பில் தன் காலை நுழைத்துக்கொண்டு, தான் பெரிய செயலைச் செய்வதாக நினைத்து, அந்த ஆப்பைஅசைத்து அசைத்து அரும்பாடு பட்டுப் பிடுங்கி எடுத்தது, மரத்தின் பிளப்பு நெருங்கி ஒன்றுபட்டதனால் அதன் கால் அகப்பட்டுக்கொண்டு அக்குரங்கு துன்புற்றது. அதன் அறியாமையாலே இந்த அல்லல் எய்தியது.

" கவர்பிளந்த மரத்தொளையில் கால்நுழைத்துக்
கொண்டே
ஆப்பதனை அசைத்து விட்ட குரங்கதனைப் போல
அகப்பட்டீர் "

என்று அழகாகக்கூறுகின்றார் பட்டினத்துசுவாமிகள்.

ஆகவே அறியாமையை அகற்றினால் துன்பந் தானே அகலும்.

இனி அறியாமையை அகற்றி அறிவை வளர்க்க வழி யாது என்றால் சிறந்த அறிவு நூல்களைப் படிக்குந்தோறும் அறியாமை தேய்ந்து அறிவு வளரும்.

'தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு'

என்கின்றார் திருவள்ளுவர்.

ஆதலால் அறிவு நூல்களை ஒவ்வொருவரும் விரும்பி ஓதி உணரவேண்டும். அறிவு நிறைந்த ஆன்றோர்களுடன் நாள்தோறும் சில நிமிஷ நேரமாகிலும் பழகவேண்டும்.

'இனிது இனிது அறிவுள்ளோரைக்
கனவிலும் நனவிலும் காண்பதுதானே'

என்று ஔவையார் அருளிச்செய்தார்.

எனவே நாம் ஒவ்வொருவரும் அறிவு நூல்களை ஓதியும், அறிஞர்களோடு பழகியும், அறியாமையை அறவே களைந்து அறிவை நிரம்பப் பெற்று துன்பத்தினின்றும் நீங்கி இன்பமாக ஓங்கி உய்வோமாக.

———

உ

முருகா

# 2. துணை

அன்பர்களே !

நாம் ஒவ்வொருவரும் பிரயாணத்திலேயே யிருக்கின்றோம். நாம் தூங்கும்போதும், இருக்கும்போதும் பிரயாணம் நடந்துகொண்டேதான் இருக்கின்றது. அந்தப் பிரயாணம் விரைவாகவும்போய்க்கொண்டிருக்கின்றது. "சாமாறே விரைகின்றேன்" என்பார் மணிவாசகர். நெடுந்தூரம் போகின்றவர்கள் நல்ல துணையுடன் போவது நல்லது. "துணையோடல்லது நெடுவழி யேகேல்" என்கின்றார் ஒளவையார்.

நாம் தக்கவர்களைத் துணை பற்றினால் எல்லா நலன்களும் உண்டாகும். பாலமில்லாத ஒரு நதியைக் கடக்க எண்ணிய ஒருவன் தனது காளைமாட்டை நதியில் நீந்தவிடுத்து அதன் வாலைப் பற்றிக் கொண்டான்; பயமின்றி அக்கரை சேர்ந்தான். அதைக் கண்டஒரு பேதை தான் கையில் சங்கிலியுடன் பிடித்திருந்த நாயை நதியில் நீந்தவிட்டு அதன் வாலைப் பற்றினான். நாயும் அவனும் நதியில் ஓடுகின்ற தண்ணீரில் மாண்டார்கள். அதுபோல் சிறியாரைத் துணை பற்றியவன் பிறவியலையாற்றைக் கடக்க மாட்டாது துன்புறு

வான் ; அறிவும் அனுபவமும் மிகுந்த ஆன்றோர்களைத் துணைபற்றியவன் பிறவியலையாற்றைக் கடந்து இன்ப முறுவான். ஆதலினால் ஔவையார் "பெரியாரைத் துணைகொள்" என்று கூறியிருக்கின்றார்கள்.

பெரியார் என்றால் யார்? உடம்பினாலே, உயரத்தினாலே, தனத்தாலே, அழகாலே, பக்தியினாலே, படிப்பினாலே உயர்ந்தவர்கள் எல்லோரும் பெரியோர்கள் தானா? இல்லை; செயற்கரிய செய்பவர்களே பெரியவர்கள்.

*செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்*
*செயற்கரிய செய்கலா தார்.* —*திருக்குறள்.*

இனி அப்பெரியார்களைத் துணைகொண்டு அவர்களை நம்மவராகக் கொண்டு வாழ்வதே மேலான தன்மை.

*அரியவற்று ளெல்லாம் அரிதே பெரியாரைப்*
*பேணித் தமராக் கொளல்.* —*திருவள்ளுவர்.*

அப் பெரியார்களுள் தலையாயவன் இறைவன். அவனையே "பெரியானைப் பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாள் எல்லாம் பிறவா நாளே" என்கின்றார் அப்பரடிகள்.

இறைவன் வேண்டுதல் வேண்டாமை யிலாதான்; தனக்குவமையில்லாதான்; அறவாழி அந்தணன். அப் பரமபதி பொதுவாக எல்லாருக்கும் அருந்துணையாக இருக்கின்றான். சிறப்பாகத் தன்னையடைந்த அடியார்கட்குப் பெருந்துணையாக இருந்து அருள் புரிகின்றான்.

" அருந்துணையை அடியார்தம் அல்லல் தீர்க்கும்
அருமருந்தை அகல்ஞாலத் தகத்துள் தோன்றி
வருந்துணையும் சுற்றமும் பற்று விட்டு
வான்புலன்க ளகத்தடக்கி மடவாரோடும்

பொருந்தணைமேல் வரும்பயனைப் போக மாற்றிப்
பொதுநீக்கித் தனைநினைய வல்லோர்க்கென்றும்
பெருந்துணையைப் பெரும்பற்றப் புலியூரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே "

என்றார் அப்பரடிகள்.

ஆகவே மரணயாத்திரையில் சென்றுகொண்டிருக்கின்ற ஆன்மாக்கள் இறைவனைத் துணையாகக் கொள்ளவேண்டும்.

இறைவன் ஆன்மாக்களுக்கு வரும் இடையூறுகளை நீக்கி, அவ்வப்போது ஆவன அறிந்து செய்வான்.

" கனத்த செந்தமிழால் நினையே தினம்
நினைக்கவும் தருவாயுன தாரருள்
கருத்திருந்துறைவாயென தாருயிர் துணையாக"

என்கின்றார் அருணகிரிநாதர்.

சகுனியைத் துணை பற்றினான் துரியோதனன். குலத்துடன் அழிந்தான். கண்ணபிரானைத் துணை பற்றினான் அருச்சுனன். எல்லா நலன்களையும் பெற்றான்.

பதினான்காவது நாள் போரில் துரியோதனனுக்குத் துணையாக வந்த வருணராஜகுமாரன் சுதாயு என்பான், தனஞ்சயனைக் கொல்லும் பொருட்டு, தன் தந்தை தனக்குத்தந்த சிறந்த வஜ்ரகதாயுதத்தை விடுத்தான். அர்ச்சுனன் அக்கதையை அழிக்க ஆயிரம் பாணங்களை விடுத்தான். அப் பாணங்களை யெல்லாம் அக் கதாயுதம் அழித்து அவனை நோக்கி வந்தது. அமரர்கள் அஞ்சினார்கள். அர்ச்சுனனும் கலங்கினான். அக்கதாயுதம் அர்ச்சுனன் அருகில் வந்ததும் அவன் தேரைச் செலுத்துகின்ற கண்ணபிரான், தேர் ஓட்டுகின்ற கோலைக் கீழே வைத்துவிட்டு தன் மார்பைக் காட்டினான். கதை கண்ணன் மார்பில் மலையில் இடி விழுவதுபோல் பட்டது. அதை விடுத்த சுதாயுவின் தலை ஆயிரம் துண்டுகளாக வெடித்து மாண்டான். கண்ணனை வணங்கிக் காரணம்கேட்டான் அர்ச்சுனன். ''நிராயுதன் மீது இக்கதையை விடுத்தால் உன் தலை வெடிக்கும்'' என்று இவன் தந்தை கட்டளையிட்டிருந்தான். அதனால் இவ்வாறு நிகழ்ந்தது என்று கண்ணபிரான் கூறினார். அர்ச்சுனன் அகமகிழ்ந்தான்.

ஆதலால் நாம் எப்போதும் பெரியவர்களைத் துணைகொண்டு இன்புறுவோமாக.

*தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்*
*வன்மையு ளெல்லாந் தலை.* —*தமிழ்மறை.*

———

உ

முருகா

# 3. நன்மை செய்

அன்பர்களே!

கட.வுதல் என்ருல் செலுத்துதல் என்று பொருள். உலகங்களையும் உயிர்களாகிய நம்மையும் செலுத்து கின்றபடியால் இறைவனுக்குக் கடவுள் என்ற பேர் ஏற்பட்டது. நம்மையெல்லாம் செலுத்துகின்றவர் கடவுள். ஒரு வண்டியைச் செலுத்துகின்றவன் வண்டிக்குள் இருந்து செலுத்துவதுபோல் கடவுள் உயிருக்குயிராக இருந்து செலுத்துகின்ருர்.

கண்ணுல் காணமாட்டாமையால் கடவுள் இல்லை என்று கூறக்கூடாது. இந்த உடம்பிலே யுள்ள உயிரை நாம் எப்போதாவது கண்ணுல் கண்ட துண்டா? காணமாட்டாமையால் நாங்கள் உயிரில்லா தவர்கள் என்று கூறிஞல் உலகம் சிரிக்குமல்லவா? உடம்புக்குள் உயிரும் உயிருக்குள் இறையும் உறை கின்றன.

ஆகவே கடவுள் உயிர்கள் தோறும் உறைகின் ருர். ஒன்ருகி உடனுகி வேருகி யிருக்கின்ருர். எவ் வுயிரும் பராபரன் சந்நிதியாகும். ஆதலால் எல்லா

உயிர்கட்கும் நாம் நன்மையே செய்யவேண்டும். உயிர்களுக்குச் செய்யும் நன்மை கடவுள் வழிபாடாகும்.

உயிர்களுக்கு வருகின்ற இடர்களை முடிந்தவரை நீக்கியும் நன்மை புரிந்தும் மகிழவேண்டும். அதுவே அறிவு படைத்ததன் பயனுமாகும்.

'அறிவினா னாகுவ துண்டோ பிறிதின்நோய்
தன்னோய்போல் போற்றாக்கடை'

என்கின்றார் திருவள்ளுவர்.

இனி கடவுள் எங்குமிருக்கின்றார் என்பதனையும் மறவாமல் கருத்தில் இருத்த வேண்டும்.

"பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூரணா னந்தமே"

என்கின்றார் தாயுமானார். இந்த எண்ணம் இடையறாது உள்ளத்தில் நிலைபெற்றிருக்க வேண்டும். ஆண்டவன் நம் உள்ளத்தில் இருக்கின்றானாதலினாலும், நாம் செய்யும் தீமைகட்குத் தண்டனை தருவோன் அவனே யாதலினாலும், நாம் அவனையன்றி பிரிந்திருக்க முடியாமையாலும் நாம் தீமைகளை நினையாமலும் சொல்லாமலும் செய்யாமலும் இருக்க வேண்டும். ஜீவசாட்சியாக இருந்து இறைவன் நம் எண்ணங்களை யெல்லாம் அறிகின்றான். நாம் பேசும் பேச்சுக்களையெல்லாம் கேட்கின்றான். நாம் செய்யும் ஒவ்வொரு செயல்களையும் காண்கின்றான். ஆதலினால் நாம் நல்லனவே நினைத்து, நல்லனவே பேசி, நல்லனவே செய்யவேண்டும்.

இனி, நாம் பிறர்க்குத் தீங்கு செய்வோமானால் அது நமக்கேதான் செய்கின்றோம் என்பதை மறந்து விடக்கூடாது. பிறர்க்குச் செய்யும் நன்மையும் தீமையும் நமக்குத் திரும்ப வருகின்றன.

'*நன்மையுந் தீமையுந் தான்தர வருமே*'

வினை அறிவில்லாத சடம், ஆதலின் தானே வந்து நம்மைச் சாராது. நாமும் சிற்றறிவுடையோமாதலின் நாமும் செய்த வினையை யறிந்து அடையவல்லோ மல்லோம். ஆதலின் முற்றறிவும் பேராற்றலும் படைத்த பரம்பொருளாகிய கடவுள் அவரவர்கள் செய்த வினைகளை அவரவர்கட்கு காலம் இடம் அறிந்து ஊட்டுகின்றார்.

இனி நாம் செய்த நல்வினை தீவினை செய்த அளவே வரா. ஒன்று ஆயிரமாகப் பெருகி வரும். வயலில் இட்ட விதை ஒன்று பலவாக வருவது போல், வினைகளும் பன்மடங்கு வளர்ந்துவரும்.

ஒரு முனிவருடைய ஆசிரமத்தில் வேறு ஒரு முனிவர் உணவு உண்டுகொண்டிருந்தார். அம் முனிவருடைய சின்னஞ்சிறு மகன் விளையாட்டாக முனிவருடைய உணவில் ஒரு சிறு கல்லை எறிந்தான். முனிவர் அதனை அறியாது உணவு அருந்தினார்.

பின்னர் முனிவர் புதல்வர் சகல நூல்களையுங் கற்று அரிய பெரிய தவஞ்செய்து மா தவசிகாமணியாக ஆனார். இவர் ஒருமுறை தற்செயலாக அறக் கடவுளுடைய உலகஞ் சென்றார். அங்கு ஒரு குன்றம் இருக்கக் கண்டார். "இது என்ன" என்று அறக்

கடவுளை வினவினார், "இது நீர் சிறு பிள்ளையாக இருந்தபோது ஒரு முனிவர் உணவில் எறிந்த கல், இங்கு வளர்ந்துகொண்டே யிருக்கின்றது. இதை நீர் இங்கு வந்து உண்ணுதல் வேண்டும்" என்றார்.

அதைக் கேட்ட முனிவர் நடுங்கிப் பூவுலகம் வந்து அக்குன்றுக்குச் சமமான ஒரு குன்றைப் பிளந்து சிறு துண்டுகளாக்கி அவற்றை இடித்துக் கரைத்து நாள்தோறும் குடித்து முடித்தார். நரக வுலகில் இருந்த கல் கரைந்துவிட்டது. சிலையையே உணவாகக் கொண்டதனால் அவர் சிலாதனர் எனப் பட்டார். அவர் செய்த புத்ரகாமேஷ்டி யாகத்தில் அவதரித்தவர் திருநந்திதேவர்.

ஆகவே நாம் சிறு பாவங்களையுஞ் செய்யக் கூடாது.

எல்லா உயிர்களிலும் இறைவன் இருக்கின்றான் என்று எண்ணி உயிர்களுக்கு நன்மையே செய்து நலம்பெற வேண்டும்.

எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி யிரங்கவுநின்
தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே.

—தாயுமானார்

---

உ

முருகா

# 4. தருமம்

அன்பர்களே!

நாம் அயலூரிற் சென்று ஈட்டிய பொருளை அங்கிருந்து வரும்போது உடன் கொண்டுவராமல் அங்கேயே வைத்துவிட்டு வர விரும்புவோமா? அதுபோல் இவ்வுலகில் தேடிய பொருளை, இவ்வுடம்பு விட்டுப் புறப்படும்போது உடன் கொண்டு போகாமல் இங்கேயே வைத்துவிட்டுப் போவது அறிவுடைமையாகாதல்லவா? பொருள் உடன் வரவேண்டுமாயின் என்ன செய்யவேண்டும்? பொருளை வறியவர்க்கீந்து தருமம் புரிந்து அருளாக மாற்றிவிடவேண்டும். அருள் அந்தவுலகத்திற்கு வரும். மறுபிறப்பிலும் அருளால் நாம் இன்புறுவோம்.

" எங்காயினும் வரும் ஏற்பவர்க்கிட்டது "

என்கின்றார் அருணகிரிநாதர். இங்கு நாம் ஏற்பவர்க்கிடுவோமாணுல் மாண்டு எந்த வுலகத்திற்குச் சென்றாலும், மீண்டு எந்தத் தேயத்திற் பிறந்தாலும் அங்கு இப் புண்ணியத்தின் பயன் வரும்.

வறியவர்கட்கு வழங்கி அவர்கள் இன்புறுவதைக் கண்டு நாம் இன்புற வேண்டும். "ஈத்துவக்கும்

இன்பம்'' என்பார் திருவள்ளுவர். அங்ஙனம் ஈந்தவரே வாழ்ந்தவர்; ஈயாதார் மாய்ந்தவரே யாவார். "ஈயா மனிதரை ஏன் படைத்தாய் கச்சியேகம்பனே'' என்று இறைவனையே கேட்கின்றார் திருவெண்காடர். இரப்பவர்க்கீயாமல் கரப்பவர்கட்காகவே கடுநரகங்களை இறைவன் உண்டாக்கினனும்.

'கரப்பவர் தங்கட்கெல்லாம் கடுநரகங்கள்
வைத்தார்'—அப்பர்

"காசுதேடி ஈயாமல் வாழப் பெறுவோரும்
மாறிலாவ மாகால னூர்புக் கலைவாரே''
—அருணகிரிநாதர்.

ஈயார்க்கு இம்மையில் இகழும், மறுமையில் பாவமும் எய்தும்; "ஈபவர்க் கருளும் வைத்தார்'' என்றதனால் தருமஞ் செய்வோர் இம்மையில் புகழும் மறுமையில் புண்ணியமும் எய்துவர்.

வறியார்க்கு இரக்கமுடன் ஈந்தால் அது மீண்டும் ஒன்றுக்கு நூறாக நம்பால் வருகின்றது. வாணிபத்திலும் விவசாயத்திலும் பெரும்பயன்வரும். "விருந்தோம்புவோனிடம் அகனமர்ந்து செய்யாளுறைவள்'' என்று வள்ளுவர் வகுத்துரைத்தார். வறியார்க்கு ஈந்தால் அது எப்படி வாணிபத்தில்—விவசாயத்தில் வரும்? இங்கு தந்தது அங்கு எப்படி வரும்? என்ற ஐயம் ஏற்படலாம்; பசுவுக்கு அகத்திக்கீரை, பிண்ணுக்கு, பருத்திக் கொட்டை, பசும்புல் இவைகளை வாயிலே தருகின்றோம், மடியிலே படிக்கணக்காகப் பால் பெறுகின்றோம். தந்தது வாயில்; பெற்றது மடி

யில், அதுபோல் வறியவர்க்குப் பயன் கருதாமல் சிவார்ப்பணமாகச் செய்தது ஒன்று கோடியாகப் பெருகிவரும் என்று உணர்க.

ஒரு அவரை விதையை மண்ணில் போடுகின்றோம்; ஆயிரக்கணக்கான அவரைக்காயைப் பெறுகின்றோம். தென்னைக்குத் தண்ணீரை விட்டு இளநீரைப் பெறுகின்றோம். இவைகள் கண்கூடு.

காரைக்காலம்மையார் வந்த அடியாருக்கு மதுரக் கனிதந்து, இறைவனிடம் அதிமதுரக்கனி ஒன்றுக்கு இரண்டு பெற்றார்கள்.

பாண்டவர்கள் வாழும் இந்திரப்பிரஸ்தத்திற்கு ஒரு சமயம் கண்ணபிரான் வந்திருந்தார். அரண்மனையில் உள்ள தாமரைத்தடாகத்தில் பாண்டவர்களும் கண்ணபிரானும் நீராடி நீந்தி விளையாடினார்கள். திரௌபதி ருக்மணி சத்யபாமை சுபத்திரை முதலியோர்கள் கரையில் நின்று வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

உச்சி நேரத்தில் எல்லோரும் கரையேறினார்கள். எல்லோரையும் பிறவிக்கடலினின்றுங் கரையேற்றுகின்ற கண்ணன் மட்டுங் கரையேறவில்லை. கழுத்தளவு தண்ணீரிலேயே முழுகியிருந்தார். தருமர், "கண்ணா! உணவு நேரம் வந்துவிட்டது; பெண்கள் காத்துக் கொண்டுள்ளார்கள். கரையேறு" என்றார். அவர் கரையேறவில்லை. பீமன் முதலியோரும் வேண்டினார்கள். அவர் அசைவற்று இருந்தார். காரணம் ஒருவருக்கும் விளங்கவில்லை. திரௌபதியின் நுண்ணிய அறிவில் காரணம் விளங்கியது. பளீர் என்று

தன் புடவையின் முன்தானையில் சாணளவு கிழித்துச் சுருட்டிக் கண்ணபிரானிடம் வீசி எறிந்தாள். கண்ண பிரானுக்குக் கௌபீனம் தவறியது. பெண்கள் கரையில் இருப்பதனால் சொல்லவோ வெளிப்படவோ இயலாமல் தவித்தனர். ஏன்? முன் சில பெண்களைத் தண்ணீரில் ஆடையின்றி அல்லற்பட விடுத்தார். முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும். அதனால் அவர் இப்போது ஆடையின்றி அல்லற்பட்டார். அக் குறிப்பறிந்து திரௌபதி சாண்புடவை கொடுத்து உதவினாள்; அதனை யுடுத்து பகவான் கரையேறினார். திரௌபதி தொழுதாள், "அம்மா! இன்றுசாண் புடவை தந்து என் மானங் காப்பாற்றினாய்; சமயம் வந்தால் உனக்குக் கோடி புடவை தந்து மானங் காப்பாற்றுவேன்" என்று அருள் புரிந்தார். அது படியே திரௌபதிக்கு மான சம்ரக்ஷணம் புரிந்தார். ஆகவே நாம் செய்த தருமம் ஒன்றுக்கு ஆயிரமாகவும் லட்சமாகவும் கோடியாகவும், செய்த பாத்திரத்திற்குத் தக்கபடி நம்பால் வரும்.

உதவி வரைத்தன் றுதவி உதவி
செய்யப்பட்டார் சால்பின் வரைத்து —திருக்குறள்.
தான் சிறிதே யாயினும் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்துவிடும் —நாலடியார்.

எனவே நாம் கைத்துண்டாயபோது கரவாது அறஞ் செய்து உய்வோமாக.

அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றுத் துணை —தமிழ்மறை.

---

உ

முருகா

# 5. துன்பம்

அன்பர்களே!

துன்பத்தைக் கண்டு அஞ்சாதவனே இன்பத்தை யடைவான். இன்பமாகிய மாளிகைக்குத் துன்பம் ஒரு வாயில் போன்றது. வாயிலில் நுழையாது ஒரு மாளிகைக்குப் போக முடியாது. அதுபோல் துன்பம் எய்திறலொழிய இன்பம் எய்தாது. துன்பம் வருகின்றபோது அதை அஞ்சாது வரவேற்பவனே தீரன்.

'இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வ தஃதொப்பதில்'

என்று கூறுகின்ருர் தெய்வப்புலவர் திருவள்ளுவனர்.

நளனும், அரிச்சந்திரனும், இராமரும், பாண்டவர்களும் அளவற்ற துன்புற்றதனல். எல்லையில்லாத புகழும் இன்பமும் அடைந்தார்கள்.

இனி தட்டுதல், அராவுதல், வளைத்தல் முதலிய துன்பத்தை யடைந்த தங்கம் ஆபரணமாகி அழகு பெறுவதோடு பிறருக்குப் பயன்படுகின்றது. வளைப்

பதனால் துன்புற்ற மூங்கில், பல்லக்கில் மன்னனுடைய மணிமகுடத்திற்கு மேல் இருக்கும் மேம்பாடடைகின்றது.

பசி, தாகம், வெயில், மழை இவைகளைப்பொறுத்துத் தவஞ் செய்தவர்கள் அருளைப் பெறுகின்றார்கள். இரவு பகலாக ஓடி உழைத்துத் துன்புற்று விவசாயமும் வியாபாரமும் செய்தவர்கள் பொருளைப் பெறுகின்றார்கள். துன்புற்றாலன்றி அருளும் பொருளும் எய்த மாட்டா.

'சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு'

என்பது பொதுமறை.

துன்பம் மூன்று வகையாக வரும்; பாம்பு, தேள், பகைவர் முதலிய உயிர்கள் மூலம் வருவது ஆதியான்மிகம்; தண்ணீர், நெருப்பு, இடி, மழை, காற்று, குளிர் முதலியவைகளால் வருவது ஆதிபௌதிகம்; நோய் முதலியவைகளால் வருவது ஆதி தைவிகம். இவ்வாறு வருந் துன்பங்கள் நாம் முற்பிறப்பில் செய்த வினை காரணமாகவே வருகின்றன. அவைகளை நாம் பொறுமையுடன் அநுபவித்தாலொழிய அவை தீர மாட்டா. கருவுற்ற ஒருத்தி துன்புற்று மகவு பெற்றே தீரவேண்டும். அதுபோல் உடம்பு முகந்து கொண்ட வினைகளைத் துய்த்தே தீரவேண்டும்.

அன்றியும் பிறருக்கு நாம் உதவி புரிய வேண்டுமானால் துன்புற்றுத்தானாகவேண்டும். உழுவதனால் துன்புறுகின்ற பூமி பயிரையும் அதன் மூலம் தானி

யத்தையும் நமக்குத் தருகின்றது. திரி எரிந்து வேதனையுற்று நமக்கு ஒளியைத் தருகின்றது. ஆகவே இன்பம் விழையாது உழைத்துத் துன்பத்தை வர வேற்றுத் தொழில் புரிகின்ற ஒருவன் தன் உறவின ருடைய துன்பத்தை நீக்கி உறுதி செய்கின்ற தூண் போன்றவனுவான்.

*இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்*
*துன்பந் துடைத்தூன்றுந் தூண். —திருக்குறள்.*

கடவுளை நம்பி நன்னெறியில் நிற்பார் சில சம யம் துன்புறுகின்றார்கள். கடவுள் நம்பிக்கையின்றி புன்னெறி நிற்பாரில் பலர் இன்புறுகின்றார்கள். என்ன காரணம்?

காலில் முள் தைக்க வேதனையுறும் புதல்வ னுடைய தந்தை பெரிய முள்ளை யெடுத்துக் குத்தி மேலும் வேதனை தந்து வேதனையை நீக்குகின்றார். அழுக்குடைய உயர்ந்த ஆடையைக் கல்லிலே அடித் துத் துன்புறுத்தி அழுக்கை அகற்றுகின்றனர். சிலந்தி வந்து துன்புறுவானை வாளால் அறுத்துச் சுட்டு மருத் துவன் அதனை நீக்குவான். அதுபோல் இறைவன் நம்மிடமுள்ள ஆணவ மலத்தை யகற்றி இன்பத்தைப் பாலிக்கும்பொருட்டு நம்மை நையவைப்பார். அது கருணையின் விளைவு என்று அறிக.

ஒரு மன்னன் பாக்கு வெட்டியால் பாக்கை வெட்டுகின்றபோது அவன் பெருவிரல் அகப்பட்டு வெட்டுப்பட்டது. அவன் துன்புற்றுத் துடித்தான். மதிநலம் படைத்த மந்திரி, "மன்னரே! இதுவும் ஒரு

நன்மைக்குத்தான். எல்லாம் திருவருள்'' என்றான். மன்னனுக்குச் சினம் மூண்டது. "விரல் போனது நன்மைக்கா? ஆனால் உனக்குச் சிறைத் தண்டனை விதித்துள்ளேன்'' என்றான். அமைச்சன் "அதுவும் என் நன்மைக்கே'' என்று கூறி சிறை புகுந்தான்.

மறுநாள் மன்னன் வேட்டையாடக் கானகம் போனான். வேடர் வில்லியர் மெய்க்காவலர் அனைவரும் தொடர்ந்து சென்றார்கள். உச்சி நேரத்தில் ஒரு சிங்கம் எதிர்ப்பட்டது. அனைவரும் அஞ்சி ஓடிவிட்டார்கள். மன்னன் சிங்கத்தை எதிர்த்துப் போராடிக் கொன்றான். பின்னர் மன்னன் தனியே செல்லும்போது மலைவாழ் காடவர் சிலர் பின்புறம் வந்து அவனைக் கட்டிப் பிடித்துக் கொண்டு போய், தாம் புரியும் விழாவில் தமது தேவதையின் முன் நிறுத்திப் பலியிடுவதற்காக வாளை ஓங்கினார்கள். அக்காடவர் தலைவன் இடைமறித்து, "இவன் விரல் வெட்டப்பட்டுள்ளது. அங்கம் பழுதானவனை நம் தேவதைக்குப் பலியிடக்கூடாது'' என்று தடுத்து விடுத்தான். மன்னன் மகிழ்ந்து நகரம் வந்தான். அமைச்சன் அறிவுரையை உன்னி உவந்தான். அவனை யழைத்து நிகழ்ந்ததையுரைத்து, "இவ்விரல் வெட்டுப் படவில்லையானால் என் தலை போயிருக்கும். என் நன்மைக்கு இது நிகழ்ந்தது; சிறைத் தண்டனையால் உனக்கு என்ன நன்மை விளைந்தது?'' என்று வினவினான்.

"வேந்தே! எல்லோரும் ஓடி ஒளிந்தவாறு சிங்கத்திற்கு முன் நான் ஓடி ஒளியேன். உம்முடன்

இருந்து துணை புரிந்திருப்பேன். காடவர்கள் என்னை யுங் கட்டிக்கொண்டு போயிருப்பார்கள். விரல் வெட்டுப்பட்ட உம்மை விடுத்து விரல் வெட்டுப் படாத என்னைப் பலியிட்டிருப்பார்கள். அதனால் என் நன்மைக்கே சிறைத் தண்டனை விதிக்கப்பட் டது'' என்றான். மன்னன் கேட்டுத் தெளிவு பெற் றான்.

ஆகவே உற்ற நோய் நோன்று உயிருக்கு உறு கண் செய்யாது உதவியே புரிந்து உயர்வு பெறுவோ மாக.

'இடும்பைக் கிடும்பை படுப்பர் இடும்பைக்
கிடும்பை படாஅ தவர்' —திருக்குறள்.

---

# 6. சுகம்

அன்பர்களே !

சுகத்தை எல்லோரும் விரும்புகிருர்கள். துக்கத்தை வெறுக்கிருர்கள். ஆனல் உலகிலே யாராவது சுகமாக இருக்கிருர்களா? அரசன் முதல் ஆண்டிவரை எல்லோரும் துக்கமயமாகத்தான் இருக்கிருர்கள். வாழ்வில் சுகம் என்பது அணுவளவும் இல்லை. மனைவி மக்கள் நிலம் வீடு செல்வம் பதவி இவைகளை சுகம் என்று பிறழவுணர்ந்து, இவைகளை ஈட்டுவதிலேயே வறிதே வாழ் நாளைக் கழித்து மாய்கின்ருர்கள். மனைவி, மக்கள், செல்வம் இவைகளால் சுகத்தை நாடுவது, கல்லைக்கட்டிக்கொண்டு நீந்துவதற்குப் பழகுவதையொக்கும். "தாலி கட்டையிலே தொடுத்து நடுக்கட்டையிலே கிடத்துமட்டுங் கவலை தானே." "மதலையைப் பெறு நாள் துன்பம், வளர்த்திடு நாளும் துன்பம்". செல்வத்தை ஆக்கும்போதும் துன்பம்; அதனைக் காக்கும்போதும் துன்பம்; அதனைச் செலவிடும்போதும் துன்பம். சிலர் மாடமாளிகை, வாகனம், ஆடை, அணிகலன்களோடு இருப்பார்கள். தொலைவில் இருந்து பார்த்தால் சுகமாக இருப்பது போல் காட்சியளிப்பர். நெருங்கிப்பார்த்தால் துக்கமயமாக இருப்பர். மலையைத்தொலைவில் இருந்து பார்த்தால் மழுமழுப்பாகவும் மரகதக் குவியல் போலும் காணப்படும். நெருங்கிப் பார்த்தால் கல்லும், கரடும் முள்ளும் முரடுமாக இருக்கும். ஆதலினலே துக்கத்

தைப் போக்கி சுகத்தைப் பெறவேண்டுமானால் என்ன செய்யவேண்டும்? சுகம் எங்கே இருக்கின்றது என்பதைப் பற்றிச் சிந்திப்பது அறிஞர் கடன்.

அன்பர்களே!

மனம் அடங்கிய இடத்திலேதான் உண்மையான சுகம் ஊற்றெடுத்து ஓடுகின்றது.

நம்முடைய மனம் ஒரு கணத்திற்குள் பலப்பல நினைவுகளை நினைத்து அங்கும் இங்குமாக அலைகின்றது. காடுங் கரையும் மனக் குரங்கு கால்விட்டு ஓடுகின்றது. "சினமிறக்கக் கற்றாலும் சித்தியெலாம் பெற்றாலும் மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே" என்கின்றார் தாயுமானார்.

மனம் அடங்குவது மிகக் கடினம். அதிலே உழைத்தவர்க்குத்தான் அதன் அருமை தெரியும். "சிந்தையை யடக்கியே சும்மா இருக்கின்ற திறம் அரிது". நெடுங்காலம் ஜெபம், தியானம், முதலிய அரிய சாதனைகளால் மனதை அடக்கவேண்டும். "தடுங்கோள் மனத்தை — அருள் தானே உமக்கு வெளிப்படும்" என்ற கந்தரலங்காரத் திருவாக்கை இங்கு உன்னுக.

பூஜையில் அமர்ந்தாலும் சிலசமயம் மனக் குரங்கு தாவிக்குதித்து எங்காவது ஓடும். அதன் தலையில் குட்டி, மந்திரமாகிய சங்கிலியால் பிணைத்து உறுதியாகிய தூணிலே கட்டிப் போடவேண்டும். பிறகு அதுவே நன்மனமாகி நமக்கு இனிமையைச் செய்யும்.

'சும்மாயிருக்கச் சுகஞ்சுக மென்று சுருதியெல்லாம்
அம்மா நிரந்தரஞ் சொல்லவும் கேட்டும்
அறிவின்றியே
பெம்மான் மவுனி மொழியையுந் தப்பி
என்பேதைமையால்
வெம்மாயக்காட்டில் அலைந்தேன் அந்தோ
என்விதிவசமே'

என்கின்ருர் தாயுமானுர்.

சும்மா இருந்து சுகம் பெற்றவர் அருணகிரிநாதர். அச்சுகம் என்று வருமோ என்று ஏங்கி ஏங்கி இறையருளாற் பெற்ருர் இராமலிங்கர்.

இன்று வருமோ நாளைக்கே வருமோ அல்லதுமற்
றென்று வருமோ அறியேன் எங்கோவே—துன்றுமல
வெம்மாயை யற்று வெளிக்குள் வெளிகடந்து
சும்மா யிருக்கும் சுகம்.

நாம் வெய்யிலிலே, மழையிலே, காட்டிலே, மேட்டிலே அலைகின்றபோது துக்கப்படுகின்ருேம், வீட்டிலே வந்து அலைச்சலின்றி அமைதியா யிருக்கின்ற போது சுகப்படுகின்ருேம். அதுபோல் கண்டவாறு மனம் அலைகின்றபோது துக்கமே வரும். அவ்வாறு அலைகின்ற மனதை ஒருபுறம் நிறுத்தி வைத்தால் சுகமுண்டாகும்.

அழகிய ஒரு தெய்வ இளநல வடிவத்தை இதயத்தில் நிறுவி உதடு அசையாமல் மனத்திலே அம்மூர்த்திக்குரிய திருமந்திரத்தை வைத்து அம் மனம் அதனை நினைக்குமாறு செய்தால் மனம் சிறிது சிறிதாக அடங்கிவிடும்.

திருவள்ளுவர் ஒரு சமயம் தனது மாணவர் ஏலேலசிங்கரைக் காண அவருடைய மாளிகைக்குச்

சென்றிருந்தார். ஏலேலசிங்கர் பெருந் தனவந்தர். வள்ளுவர் வந்த சமயம் அவர் வெள்ளி தங்கப் பாத்தி ரங்களை வைத்து சிவபூஜை செய்துகொண்டிருந்தார். திருவள்ளுவர் மாளிகைக்கு வெளியில் இருந்தபடியே அவர் வழிபாடு செய்கிறார் என்று காவலர் மூலம் அறிந்து வழிபாட்டிற்கு இடையில் குறுக்கிடவேண் டாம் என்று கருதி வெளித் திண்ணையில் அமர்ந்திருந் தார். ஏலேலசிங்கர் நெடுநேரம் வழிபாடு புரிந்து முடிந்தபின் வெளியே வந்தார். தனது குருநாதரைக் கண்டு திடுக்கிட்டுவிட்டார். "சுவாமீ! என்ன இப்படி தாங்கள் திண்ணையில் அமர்ந்திருக்கலாமா? உள்ளே வந்திருக்கக் கூடாதா? எப்போது வந்தீர்கள்? உள்ளே வாரும்" என்று வினவினார்.

திருவள்ளுவர், "ஒன்றும் விசேடமில்லை, சும்மா உன்னைக் காண வந்தேன். நீ பூஜையிலிருந்தபடியால் இங்ஙனமே அமர்ந்திருந்தேன்" என்றார்.

"சுவாமீ! நான் மூன்று மணி நேரம் பூஜை செய் தேனே. தாங்கள் வந்து எவ்வளவு நேரம் ஆகியிருக் கும்" என்று ஏலேலசிங்கர் தாம் அதிகநேரம் பூஜை செய்ததைக் குறிப்பிட்டார்.

திருவள்ளுவர், "அப்பா! நீ திருவல்லிக்கேணியிலே நூல் கொடுத்த பாக்கி இன்னும் வரவில்லையே; வட்டி நஷ்டமாகின்றதே! என்று எண்ணினையே; அந்த சம யத்தில் நான் வந்தேன்" என்றார்.

ஏலேலசிங்கர் மனமடங்காத வழிபாட்டை எண்ணி நாணினார். ஆகவே மனத்தையடக்கி சுகம் பெறவேண்டும்.

உ

முருகா

# 7. எனது

அன்பர்களே!

'யான் எனதென்னுஞ் செருக்ககறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்'

என்ற பொய்யா மொழிப்படி யான் எனது என்ற இருவகைப் பற்றுக்களை அறுக்கவேண்டும். முதலில் புறப்பற்ருகிய எனது என்பதை அறுக்கவேண்டும். நமக்குத் தொடர்பில்லாத இவ்வுலகப் பொருள்கள் அனைத்தையும் "என்னுடையது, என்னுடையது" என்று எண்ணி ஒவ்வொருவரும் உயிரைவிடுகின்ருர்கள். உடம்பை விட்டு உயிர் பிரிகின்றபோது ஒன்ருவது உடன் வருவதில்லை. உலகில் உள்ள பொருள்களில் அளவற்ற பற்று வைத்து அவைகள் முழுவதும் தனக்கே யாகவேண்டும் என்று விரும்பி ஏங்கி ஏங்கி இளைத்து அயர்கின்றனர்.

" எனதி யானும் வேருக எவரும் யாதும் யாருகும்
இதய பாவனுதீதம் அருள்வாயே"

என்ற அருணகிரிநாதருடைய அமுதவாக்கு மனிதனைப் புனிதனுக்குகின்றது.

எல்லாவற்றையும் இறைவனுடைய பொருள்களாக எண்ணி அமையவேண்டும்.

அளவற்ற நிலம் உடையவனேயாயினும் அவன் உண்பது காற்படி அரிசிதானே? பல வீடுகள் ஒருவனுக்குச் சொந்தமாக இருப்பினும் அவன் படுப்பது ஆறடி நீளமுள்ள இடத்தில்தானே?

நம என்ற சொல்லுக்குப் பொருள்: ம-என்னுடையது; ந-இல்லை. நம-என்னுடையது இல்லை. நம நம என்று இறைவன் திருவடியில் மலரிட்டு அர்ச்சிப்பது எனதன்று என தற்போதத்தை இழப்பதற்காகவே என அறிக. ஒரு பொருள் தன்னுடையதன்று என்று எண்ணுவோர்க்கு அப்பொருள் தன்னை விட்டு விலகும்போது மனக் கவலை வராது.

*'யாதனில் யாதனில் நீங்கியான் நோதல்*
*அதனில் அதனில் இலன்'*

என்பார் திருவள்ளுவர்.

ஆதலால் பற்றற்றவனே பரம ஞானி. அவனுக்கு இன்பமும் துன்பமும் எய்தமாட்டா.

**"பாரொடு விண்ணாய்ப் பரந்த எம் பரனே**
**பற்றுநான் மற்றிலேன் கண்டாய்" —மணிவாசகர்.**

**"மற்றுப்பற் றெனக் கின்றிநின் திருப்**
**பாதமே மனம் பாவித்தேன்" —சுந்தரர்.**

மனைவி மக்கள் வீடு வாசல் நிலபுலங்களுடன் கூடியிருப்பினும் அவைகட்கும் தமக்கும் தொடர்பில்லை என்று ஜனகர் மாதிரி தர்மரையிலைத் தண்ணீரைப்போல் வாழவேண்டும்.

எனது என்ற பற்றுள்ளவனுக்கு மேலுலகத்தில் இடமில்லை.

சிலர் இந்த வீடுகள் என்னுடையவை என்கின்றனர்; "என்ன வாடகை வருகின்றது" என்று கேட்டால் 'இவைகளை விற்று 12 ஆண்டுகள் ஆகிவிட்டன' என்கின்றார். விற்றுவிட்ட வீட்டையும் நிலத்தையுங்கூட என்னுடையவை என்பதில் ஒரு திருப்தியடைகின்றான் மனிதன். என்னே அறியாமை! பாவங்கள் பல செய்த ஒரு கிழவி நரகில் தீயிடை கிடந்து நெளியும் புழுவைப்போல் துடித்துக்கொண்டிருந்தாள். அவ்வழியே ஒரு தேவதூதன் சென்றான். அவனைக் கண்ட கிழவி, "ஐயா புண்ணியமூர்த்தி! என்னால் இந்த நரகவேதனையைத் தாங்கமுடியவில்லை. உனக்குக் கோடி புண்ணியம் வரும். என்னை இதனின்றும் கைதூக்கிவிடு என்று ஈனமான குரலில் அலறினாள்.

தேவதூதனுக்கு இரக்கமுண்டாயிற்று. "கிழவியே! உன்னை நான் சுவர்க்கத்தில் சேர்க்க வேண்டுமாயின் புண்ணியம் சிறிதாவது செய்திருத்தல் வேண்டும். நீ ஏதாவது புண்ணியம் செய்துளாயோ?" என்று கேட்டார்.

அக் கிழவி, "ஐயனே! எனக்கு ஏராளமான செல்வங்கள் இருந்தன. எல்லாம் என்னுடையவை என்னுடையவை என்று வைத்துக் காப்பாற்றினேன். அவைகளில் இங்கு ஒரு அணுகூட வரவில்லை. அறியாமல் கெட்டேன். கருணாநிதி! பொறுக்க முடியாத வேதனையால் தவிக்கும் என்னைக் காப்பாற்று" என்றாள்.

தேவதூதன் ; கிழவியே ! ஒன்றுமே தருமஞ் செய்ய வில்லையா?

கிழவி ; கண் தெரியாதவர்கள் வந்து கேட்டால் காலணு போடுவேன்.

தேவதூதன் ; நல்லது; காலணுவாவது தந்தனையே.

கிழவி ; காலணு போட்டு நாலணு எடுத்துக் கொள் வேன்.

தேவதூதன் ; அடி பாவி. கண்ணில்லாதவர்க்கு உபகரிக்க வேண்டாமா? எறும்புக்கு நொய்யரிசி போட்டனையா?

கிழவி ; இல்லை, நெருப்புதான் போட்டேன் ஐயா ! நான்செய்த பாவங்களுக்கு அளவில்லை. இப்போது அறிகிறேன்; என்னை மன்னித்துக் கரையேற்று.

தேவதூதன் : அம்மா! ஒரு சிறிதும் புண்ணியம் செய் யாதார் புண்ணிய உலகை யடைய மாட்டார். கடுகு நுழைய இடமிருந் தால் கடப்பாரையை நுழைப்பேன். அணுவளவும் தருமம் புரியாத உன்னை நான் எப்படிக் காப்பாற்ற முடியும்?

கிழவி ; ஐயா! இப்போது நினைவுக்கு வருகின்றது. ஒரு நாள் நான் வாழைப்பழம் சாப்பிடும் போது ஒரு பழத்தில் பாதி அழுகியிருந் தது. அந்த அழுகிய பாதியுடன் அழு காத பாதியையும் சேர்த்து ஒரு பிச்சைக்காரிக்குப் போட்டேன்.

தேவதூதன் 'நல்லது' என்று கூறினர். அங்கு அந்தப் பாதி வாழைப்பழம் வந்து நின்றது. அந்தப் பாதியிற் பாதியைத் தேவதூதன் பற்றி கிழவியை மற்றப் பாதியைப் பற்றுமாறு செய்து அதன் மூலம் அவளை நரகினின்று எடுத்தார். நரகிலே இருந்த மூன்று நான்கு பாவிகள் கிழவியின் காலைப் பற்றிக் கொண்டார்கள். கிழவி தொடக்கத்தில் அதனை யறியவில்லை. தேவதூதன் மெல்ல அவளை மேலுலகிற்குக் கொண்டு போம்பொழுது கிழவி தன் காலைப் பற்றிக் கொண்டு வருபவர்களைக், கண்டு சீற்றமுற்ருள். "ஏய்! என் வாழைப்பழத்தைப் பற்றிக்கொண்டு நான் சுவர்க்கம் போகின்றேன். நீங்கள் யார் என் காலைப் பற்றிக்கொண்டு வருகின்றீர்கள்?" என்று கூறினுள்.

தேவதூதன், "கிழவியே! தருமஞ் செய்த பழத்தை என்னுடையது என்று கூறுவது பொருந்துமா? உன் பழத்தை நீயே பிடித்துக்கொள்" என்று விட்டுவிட்டார். கிழவி பழையபடியே நரகில் வீழ்ந்தாள்.

ஆகவே எனது எனது என்ற எண்ணமுள்ளோர் அருளுலகம் அடையார்.

என்னது யான் என்பதற எவ்விடமும் என்ஞசான்
சந்நிதியாக் கண்டுநிட்டை சாதிப்ப தெந்நாளோ.
என்னது யான் என்னலற்ருேர் எங்கிருந்து
பார்க்கினும்நின்
சந்நிதியாம் நீபெரிய சாமி பராபரமே.

தாயுமானுர்

---

உ

முருகா

# 8. நான்

அன்பர்களே!

இறப்புக்கும் பிறப்புக்கும் காரணம் பற்றும் அவாவுமாகும்; தன் பொருளில் வைப்பது பற்று; பிறர் பொருளில் வைப்பது அவா. முதலில் அவாவை விடவேண்டும். பின்னர் பற்றை விடவேண்டும். ‘‘பற்றவா வேரொடு பசையற பிறவி போய் முற்று’’ என்பார் கம்பர். ‘அற்றது பற்றெனில் உற்றது வீடு’ என்பார் நம்மாழ்வார்.

மனைப்பற்று, நிலப்பற்று, புகழ்ப்பற்று, பொன் பற்று. பொருட்பற்று இப்படிப்பல நூறு பற்றுக்கள் நம்மைப்பற்றி நிற்கின்றன. இவைகளை விடுவது எளிதன்று. இவைகள் விலகுவதற்கு ஒரு சுலபமான வழியைச் சொல்லுகின்றார் வள்ளுவர். பற்றை விடு வதற்கு நீ முயலாதே. அது உன்னால் முடியாது. பற்றற்றானாகிய பரம்பொருளைப் பற்று. ஏனைய பற்றுக் கள் தானே விலகும். விளக்கை ஏற்று; இருள் தானே விலகும்.

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்றுவி டற்கு.

கவலைகள் கெடவேண்டுமானால் இறைவனைப் பற்றி நிற்கவேண்டும்.

" நிலையழி கவலைகள் கெடஉன தருள்விழி
நின்றுற் றிடவேதான்
நினதிரு வடிமல ரிணைமன தினிலுற
நின்பற் றடைவேனே "

என்பது திருப்புகழ்.

இனி, பற்று இருவகையாகும்; அகப்பற்று புறப் பற்று எனப்படும். நான் என்பது அகப்பற்று; எனது என்பது புறப்பற்று. இதனை அகங்காரம், மமகாரம் என்று கூறுவர் வடநூலார்.

'நான் செய்கின்றேன்; நான் நடாத்துகின்றேன்; நான் இதற்குத் தலைவன்; நானின்றி இவைகள் நடை பெறமாட்டா' என்று எண்ணுகின்ற நான் தொலைய வேண்டும். நான் கெட்ட இடத்தில் பரவொளி தோன்றும்.

" ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட்டென்
உள்ளமும் போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங்
கொட்டாமோ?"
—திருவாசகம்

" நான்போ யொடுங்க அடங்கலும்
மாய்ந்தால் விளங்கும் "
—திருப்புகழ்

" வான்காணு மறை காணு மலரோன் காணுன்
மால்காணுன் உருத்திரனும் மதித்துக் காணுன்
நான்காணு இடத்ததனைக் காண்பேம் "
—திருவருட்பா

ஆகவே நான் எனும் அகப்பற்றை அறவே துறந்து உலகை மறந்து அருள் நெறியில் சிறந்து விளங்க வேண்டும்.

ஒரு திருமடத்தில் ஞானகுருநாதர் மாணவர்கட்கு நாடோறும் ஞான சாத்திரங்களை இனிது முறையே பாடஞ் சொல்லிவந்தார். பல மாணவர்கள் பயபக்தி விசுவாசத்துடன் அவரிடம் பாடங் கேட்டார்கள். அந்தணச் சிறுவர்கள், அரசகுமாரர்கள், வைசிய பாலர்கள், வேளாள மைந்தர்கள் இவ்வாறு பலவகைப்பட்டவர்கள் அங்குவந்து ஒழுங்காக அமர்ந்து அமைதியாகப் பாடங்கேட்டு உள்ளந் தெளிவுபெறுவர். ஆடு, மாடு மேய்க்கின்ற ஒரு யாதவர், படிக்கத் தெரியாதவர், கம்பளியும் கோலுமாக ஒருபுறம் ஒதுங்கியிருந்து குருநாதர் கூறுவதைக் கூர்மையாகக் கேட்டுத் தலையசைப்பர். சில சமயம் அவர் கண்களில் நீர் பெருகும். குருநாதரும் அவரை அடிக்கடி பார்த்து அன்புடன் பாடஞ் சொல்வார்.

இவ்வாறு நிகழ்கின்றபோது, உயர்குலச் சிறுவர்கள் அந்த யாதவரைக்கண்டு அலட்சியஞ் செய்தார்கள். அவரைக் கண்டு ஏளனமுஞ் செய்தார்கள். தாங்கள் நன்கு படித்தவர்கள் என்றும், அவர் படிக்கத் தெரியாத மூடர் என்றும் அவர்கள் கருதினார்கள்.

குருநாதர் மாணவர்களுடைய நான் எனும் அகந்தையை அகற்றத் திருவுளங் கொண்டார். ஒரு நாள் இரவு பாடம் முடிந்தது; எல்லோரும் தத்தம் இருக்கைக்குப் போவதற்குப் புறப்பட்டார்கள்.

குருநாதர், ''மாணவர்களே! உங்களில் முதலில் மோக்ஷத்திற்கு யார் போவீர்கள்?'' என்று கேட்டார்.

ஒரே மௌனம்; மாணவரில் ஒருவனும் விடை கூறவில்லை. திகைத்து நின்றார்கள். குருமூர்த்தி தனித்தனியே ஒவ்வொருவனையும் அழைத்துக் கேட்டனர். ஒருவன் "நான் இன்னும் சிவஞானபோதம் பாடங் கேட்கவேணும்" என்றான். ஒருவன் எனக்கு ஐம்பது அறுபது வயதுக்கு மேல்தான் நான் அதைப்பற்றிக் கூறமுடியும்' என்றான். ஒருவன் 'திருமந்திரம் பாடங் கேட்கவேணும்' என்றான். இப்படி எல்லோரும் ஒவ்வொன்றைக் கூறினார்கள். குருநாதர் இறுதியில் யாதவரை நோக்கி, "அப்பா! நீ என்ன கூறுகின்றாய்?" என்றார். அவர் குருசுவாமியை வணங்கி, "ஐயனே மோட்சத்திற்கு நான் போனால் போவேன்" என்றார். அவர் கூறிய சொற்றொடருக்குப் பொருள் விளங்கப் பெறாத மாணவர்கள் அவர் மீது சீறினார்கள். "குருநாதருக்கு முன், படித்த நாங்கள் மோட்சத்திற்குப் போகமுடியும் என்று கூற அஞ்சுகின்றோம். ஆடு, மாடு, மேய்க்கின்றவனும் கல்வி யறிவில்லாதவனுமாகிய இவன் வாய் கூசாமல் 'நான் போனால் போவேன்' என்கின்றானே; இது அடுக்குமா?" என்று சினந்துரைத்தார்கள்.

ஆசிரியர், "மாணவர்களே! இரையாதீர்கள்: பொறுமையாக இருங்கள். அப்பா! நீ என்ன கூறுகின்றாய்?" என்று மீண்டும் அவரைப் பார்த்து வினவினார்.

அவர், "சுவாமி! வெறும் படிப்பும் குல நலமும் மோட்சத்தைத் தரமாட்டா. நான் போனால் போவேன்.

நான் என்ற அகப்பற்று போனுல் முத்தியடைவேன்'. என்று விளக்கிக் கூறினுர். அதனைக் கேட்ட மாண வர்கள் தலை கவிழ்ந்தார்கள். அவருடைய சொற்களில் உள்ள நுட்பத்தை யுணர்ந்து வியந்தார்கள். அன்று முதல் அவரை மதித்துத் துதித்தார்கள்.

ஆகவே "நான்", "நான்" என்னும் தன்மையை விலக்கி நன்மையடைய முயலுவோமாக.

" நானென்னும் ஓரகந்தை எவர்க்கும் வந்து
நலிந்தவுடன் சகமாயை நானுவாகித்
தான்வந்து தொடரு மித்தால் வளருந் துன்பச்
சாகரத்தின் பெருமைஎவர் சாற்ற வல்லார் "

தாயுமானுர்.

—:O:—

உ

முருகா

# 9. காட்சி

அன்பர்களே!

காட்சி என்பது எது? அக் காட்சி எவ்வாறு அமையவேண்டும்? என்று சிந்திக்கவேண்டும். சிலர் பொருட்காட்சி, கண்காட்சி, விலங்குக் காட்சி முதலியவைகளைக் கண்டு களிக்கின்றார்கள்: இவைகள் யாவும் நற்காட்சியாகா.

எல்லாவற்றையும் ஒன்றுபோல் காண்பதுவே சிறந்த காட்சியாகும். "ஒன்றாகக் காண்பதுவே காட்சி" என்று அருளிச் செய்கின்றார் ஔவையார்.

ஏழையையும் தனவந்தனையும் ஒன்றாகக் காண வேண்டும்; இன்பத்தையும் துன்பத்தையும், இகழையும் புகழையும், ஏற்றத்தையும் தாழ்வையும், போக்கையும் வரவையும், வந்தனையையும், நிந்தனையையும் ஒன்றாகக் காண்பதுவே காட்சி: பளிங்கு போல் தூய மனமுள்ளவர்க்கே இது அமையும்.

இன்ப துன்பத்திற்குக் காரணம் நாம் செய்த வினைகளேயாகும். ஒருவன் நம்மை நிந்திப்பானாயின் முற் பிறப்பில் நாம் ஒருவனை நிந்தித்திருப்போம்; அவ் வினை இப்போது ஆத்தியான்மிகமாக வருகின்றது. நம் வினையை நினைந்து அமைதியடைய வேண்டும். ஆவாரை யாரே அழிப்பார்? சாவாரை யாரே தவிர்ப்பார்? ஒருவராலும் ஆகாது. ஆவதும் சாவதும் நாம்

செய்த வினையாலேதான் என்று உள்ளூர உணர்ந்து உய்யவேண்டும்.

அப்படி நாம் அறிவோமாயின் சம நோக்கம் வரும். யார்மீதும் காய்தல் உவத்தல் உண்டாகாது. கண்ணபிரான் உயர்ந்த வெண்ணெயையும் தாழ்ந்த மண்ணையும் உண்டார்.

ஜனகர் வெப்பத்தையும் தட்பத்தையும் ஒன்றாக நோக்கினார்.

தருமர் இகழையும் புகழையும் ஒன்றாகப் பார்த்தார்.

இராமர் காட்டையும் நாட்டையும் ஒன்றென மதித்தார்.

அப்பரடிகள் பொன்னையும் மண்ணையும் ஒன்றெனப் பார்த்து உழவாரப் படையால் பேர்த்து எறிந்தார். அவ்வாறு காண்கின்ற காட்சி அருட் காட்சி யெனப்படும். அக் காட்சியைக் காண்போர் மனம், அலையற்ற கடல்போல், காற்றில்லாத இடத்தில் எரியும் விளக்கைப்போல், சலனமற்று இருக்கும். அவர்களின் உள்ளம் எப்போதும் குளிர்ந்திருக்கும். அவர்கள் முகம் மலர்ந்திருக்கும். கண்களில் கருணை வழியும். அத்தகைய ஆன்றோரைக் காண்பது ஒரு இனிய காட்சியாகத் திகழும். கண்ட கண் குளிரும்.

ஒரு கணவனும் மனைவியும் நல்லறமாகிய இல்லறத்தில் முறையே வாழ்வாங்கு வாழ்ந்தார்கள். பின்னர் இருவரும் துறவு பூண்டார்கள். கணவன்

மனைவி யென்ற எண்ணம் நீங்கியது. உண்மையான துறவுபூண்ட அவர்கள் இன்றிருந்த ஊர் நாளையிராமல் மூர்த்தி தலந்தீர்த்தம் முறையாய்த் தொடங்கி யாத்திரை செய்து வந்தார்கள்.

திருச்செந்தூர் கடற்கரை வழியே ஆண் துறவி முன்னும், பெண் துறவி சற்று பின்னுமாக நடந்து கொண்டிருந்தார்கள். ஒரு தனவந்தன் தன் மனைவியுடன் முன்னொருநாள் கடலில் நீராடியபோது ஒரு வைர வளையல் கழன்றுவிட்டது. அவன் தேடிப் பார்த்து கிடைக்கப்பெருமல் மனம் வருந்திச் சென்ருன். அவ்வளையல் இப்பொழுது வெளிப்பட்டு கதிரவன் வெய்யில் பட்டு விளக்கு போல் ஒளி செய்து கொண்டிருந்தது. ஆண் துறவி கண்டார். அவர் உண்மையாகத் துறந்தவர். அதில் அவருக்குப் பற்று வரவில்லை. ஒரு வேளை பின்னே வருகின்ற அம்மாளுக்கு இதைக் கண்டவுடனே தனக்கு என்று விருப்பம் வராதாறுலும் தன் தங்கை தமக்கை முதலியோர்க்கு எடுத்துத் தரலாம் என்ற எண்ணம் வரக் கூடுமோ? அவ்வாறு எண்ணிறுல் துறவின் தூய்மை கெடுமே என்று கருதி வைர வளையலை மணலைப் போட்டு மூடிறுர்.

அதற்குள் அங்கு பெண் துறவி வந்தார். "சுவாமீ! என்ன அது? ஏன் மணலை யிட்டு மறைக்கின்றீர்?" என்று விறுவிறுர்.

"ஒன்றுமில்லை."

"சுவாமி! துறவிகள் விளையாட்டுக்கும் பொய் சொல்லக்கூடாது; உள்ளதை உரையும்."

"...வைர வளையல்"

"இதை ஏன் மணலால் மறைத்தீர்?"

"ஒரு வேளை நீங்கள் பார்த்தால் உமது உடன் பிறந்தார்க்குத் தரலாம் என்ற எண்ணம் வந்தால் துறவுக்குப் பங்கம் வருமே என்று மறைத்தேன்".

"நீர் துறவிதானா? துறவுக்கும் உமக்கும் எத்தனைத் தூரம்? இனி நான் உம்முடன் சேர்ந்து யாத்திரை செய்யமாட்டேன்; நீர் உண்மைத் துறவியாகமாட்டீர். ஆ! ஆ! என்ன விந்தை. இது வைரம், இது மணல் என்ற வேற்றுமைக் காட்சி துறவிகட்கு வரலாமா? அவ்வாறு வந்தால் துறவு ஆகாதே. சிவனே! அதுவும் ஒரு மணல், இதுவும் ஒரு மணல். மணலை மணலால் மூடுவானேன். ஆகவே மனதில் வைரம் உயர்ந்தது என்ற எண்ணம் வந்துவிட்டபடியால் துறவின் தூய்மை சற்று குன்றிவிட்டது" என்று கூறி அந்தப் பெண் துறவி அவரை விட்டுப் பிரிந்து வேகமாக நடந்து மறைந்துவிட்டார்.

ஆண் துறவி அப்படியே சிலைபோல அசைவற்று நின்றுவிட்டார்.

ஆகவே ஒன்றாகக் காண்பதுவே காட்சி.

"கேடும் ஆக்கமும் கெட்ட திருவினர்
ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்"
—பெரியபுராணம்.

உ
முருகா

# 10. பெண்

பேணுந் தன்மை வாய்ந்தவள் பெண்; அழகுக்கு உறைவிடம் ஆதலால் மாது எனப்படும் பெண்மையில் கற்பென்னுந் திண்மையமைந்துளது. இந்த பாரத நாட்டிற்குப் பெரும் புகழை விளைவிப்பவர்கள் மூவர். கற்புடைய மாதர்கள்; பக்தர்கள்; தத்துவ ஞானிகள். இம் மூவரில் முதலில் நிற்பவர்கள் கற்புடைப் பெண்டிர். "பத்தினி பக்தர்கள் தத்துவ ஞானிகள்" என்று கூறுகின்றார் திருமூலர்.

இந்த நாட்டினில் கற்புடைமை அதிகம், பலப் பல பதிவிரதா சிரோன்மணிகள் வாழ்ந்தார்கள். என்ன தீமை நாட்டிற்கு வந்தாலும் கற்புக்கு இடர் வரக் கூடாது. பக்தர்களையும் முக்தர்களையும் சித்தர்களையும் பெறுகின்றவர்கள் பத்தினிகள்தானே! கற்புடைய மாதர்கள் இருப்பாராயின் மீண்டும் நாட்டிற்குத் தேவையான பல ஆன்றோர்களை நமக்குத் தருவார்கள்.

பெண்ணிற்குத் தமிழகம் பெருமை கொடுத்த அளவில் வேறு நாடுகள் தரவில்லை. பெண்களால் வாழ்ந்த நாடு இந்நாடு. நீதி நெறிகளை வாழவைத்தவர் ஔவையார்; சைவவுலகுக்கு உயிர் கொடுத்தவர்

மங்கையர்க்கரசியார்: வைணவ உலகுக்கு வாழ்வு தந்தவர் ஆண்டாளிம்மையார். மேலும் திலகவதியார். திருவெண்காட்டு நங்கையார், மாதவியார், இசை ஞானியார் போன்ற பல பெண்மணிகள் இந்நாட்டை அலங்கரித்தார்கள்.

இனி பெண்ணில்லையானுல் வாழ்வு இல்லை; வீட்டிற்கு உரியவனே பெண்தான். அதனுல் "இல்லாள்" எனப்படுகின்ருள். இல்லான் என்று ஆடவனைக் கூறினுல் ஒன்றுமில்லாதவன் என்று பொருள்படும். இல்லாள் என்ருள் வீட்டை ஆளுகின்றவள் என்று பொருள். "இல்லாளகத்திருக்க இல்லாத தொன்றில்லை" என்கின்ருர் ஔவையார்.

மனைவி என்று பெண்ணுக்குப் பேருண்டு. மனைவன் என்று ஆணுக்குப் பெயரில்லை. இந்த உலகமே பெண் மயமாக அமைந்துள்ளது. செல்வத்தைத் தனலட்சுமி யென்றும் தானியத்தை தானியலட்சுமி யென்றும், வீட்டை கிரகலட்சுமி யென்றும் கிராமத்தைக் கிராம தேவதை யென்றும், தேசத்தை இந்தியத்தாய் என்றும், பாரதமாதா என்றும், கல்வியைக் கலைவாணி யென்றும், வலிமையைப் பராசக்தி யென்றும், ஞானத்தை ஞானும்பாள் என்றும், தண்ணீரைக் கங்காதேவி யென்றும், மண்ணினைப் பூமி தேவி யென்றும், பேசும் மொழியைத் தாய்மொழி யென்றும், நாம் பிறந்த நாட்டைத் தாய்நாடு என்றும் இவ்வாறு எல்லாவற்றையுமே பெண்ணின் பேரால் அமைத்து மகிழ்வதனுல் பெண்ணின் பெருமை வலியுறுகின்றது.

அன்பும் இரக்கமும் பெண்ணிடத்திலே அதிக மாகக் குடிகொண்டிருக்கின்றன. அதனுலேயே இறைவன் பிள்ளைப்பேற்றைப் பெண்ணிடமாகவே அமைத்தான்.

அறப்பண்பும் பெண்ணிடம் அமைந்துளது. 'அறம் வளர்த்த நாயகி' 'தர்ம சம்வர்த்தினி' என்று அம்பிகை யைக் கூறுவதனுலும், வருகின்ற ஏழைகள், "அம்மா பிச்சை", "பார்வதா பிச்சை" என்று அழைத்துக் கேட்பதனுலும் அறிக.

கணவனுக்கு ஆயுள், புகழ், பெருமை, செல்வம், நோயின்மை முதலிய யாவும் மனைவியினுலேயே வரு கின்றன. "ஏரைப் பிடித்தவன் என் செய்வான் பானை பிடித்தவள் பாக்கியம்" என்ற பழமொழி யாலும் "மதுரை சொக்கர் ஞானம் மிகப் பெற்று வாழ்வதெல்லாம் சொக்க நாயகியாள் பானை பிடித்த முகூர்த்தத்தினுல் வந்த பாக்கியமே" என்ற பாடலா லும் அறிக.

காக்கைப்பாடினியார், நச்செள்ளையார் முதலிய சங்க காலத்துப் பெண்களும். நளாயனி, தமயந்தி, சந் திரமதி, அநசூயை, வாசுகி முதலிய பெண்களும், பெண்ணுலகிற்கு அழியாத புகழைத் தேடி வைத் தார்கள்.

நாம் பெண்மையடைந்தாலன்றி முத்தி இன்பம் கிடையாதென்பதையும் சாத்திரத்தாலறிக.

அறிவு என்பதும் பெண்ணிடத்திலே மிகவும் கூர்மையாக அமைந்துளது, ஒரு சமயம் பொய்யா

மொழிப் புலவர் மதுரைக்குச் சென்றிருந்தார். நான்காவது சங்கம் நிறுவிச் செந்தமிழை வளர்க்கும்பொருட்டு வணங்காமுடிப் பாண்டியனைக் கண்டு தன் கருத்தையறிவித்தார். பாண்டியன் அவருக்கு வேண்டிய உபசாரஞ் செய்து இருத்தினான்.

மன்னன் பின்னர் அரசகருமங்களினால் புலவர் வந்த கருமத்திலே கவனஞ் செலுத்தினானில்லை. புலவர் வெகுண்டார். "மன்னவனும் நீயோ வளநாடும் உன்னதோ உன்னை யறிந்தோ தமிழை யோதினேன்" என்று கூறும் உறுதியுடைய புலவர் மரபில் வந்தவர் பொய்யாமொழியார். சீற்றமுற்றுப் பல்லக்கில் ஏறி மதுரையை விட்டுப் புறப்பட்டார். புலவர் வெகுண்டால் நாடு நலமுறாது. இதனை ஒரு தூதன் பாண்டிமா தேவியிடம் கூறினான். அந்த வேளையில் பாண்டியன் உறங்கிக் கொண்டிருந்தான்.

அரண்மனையிலிருந்து ஒரு இளம்வீரன் புறப்பட்டு விரைந்து சென்று புலவருடைய பல்லக்கைத் தாங்கிச் சுமந்தான். அதனால் பல்லக்கு ஆடியது. புலவர் காரணம் என்ன என்று வினவினார். புதியவன் ஒருவன் சுமப்பதாக அறிந்தார். பல்லக்கைவிட்டு இறங்கிப் பார்த்தார். "அம்மணி! பாண்டிமாதேவி! என்ன விந்தை? தாங்கள் ஆண் உடை உடுத்து வந்து பல்லக்கு சுமப்பது முறையா? "என்று கேட்டார். உடனே அரசமாதேவி தொப்பி, நிஜார், அங்கி முதலியவைகளைக் களைந்தெறிந்து புலவரைத் தொழுது, "பெருமானே! என் கணவனார் அரச கருமத்தினால் தாங்கள்

வந்த கருமத்தில் கவனஞ் செலுத்தாதிருந்தனர்; அதை மன்னிக்க வேண்டும்'' என்றாள்.

பொய்யாமொழிப் புலவர் அந்த அம்மையாருடைய அறிவின் திறத்தை மெச்சிப் பாடுகின்றார்.

உமையாளும் நீயும் ஒருங்கொப்பே ஒப்பே
உமையாளுக் கங்குண்டோ ரூனம்—உமையாள்தன்
பாகந்தோய்ந் தாண்டான் பலிக்குழன்றான்
பாண்டியனின்
ஆகம்தோய்ந் தாண்டான் அரசு.

''உமையாளை மணந்த சிவனார் பிட்சாடனராய்த் திரிந்தார்; உன்னை மணந்த பாண்டியன் அரசு புரிகின்றான்'' என்று புகழ்ந்து, மீண்டும் மதுரை வந்து சங்கத்தை நிறுவி பாண்டியனையும் பாண்டி நாட்டையும் வாழ்த்தினார்.

ஆனபடியால் விண்ணுலகமும் மண்ணுலகமும் பெண்ணுலகத்தினால் விளக்கம் பெறுகின்றன.

பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மை யுண்டாகப் பெறின்.

—தமிழ்மறை.

——

உ

முருகா

# 11. அவசரம்

நாம் என்ன செய்யவேண்டும்? என்ன செய்து கொண்டிருக்கிறோம்? செய்யவேண்டிய கருமங்களுள் முக்கியமும் முதன்மையும் ஆனது எது? முந்தி செய்யவேண்டியது எது? சற்று பிந்தி செய்யவேண்டியது எது? என்ற சிந்தனைகள் அறிவு படைத்தவன் உள்ளத்தில் தோன்றாமலிருக்க முடியாது.

ஒருவனுக்குத் தலை மயிர் தீப்பற்றிக்கொண்டது. உணவும் உறக்கமும் மனித வாழ்க்கைக்கு இன்றியமையாதவை என்றாலும் அவைகளை அவன் அப்போது விரும்பமாட்டானல்லவா? தலைமயிர் எரியும் தருணத்தில் அவசரமாகத் தேடவேண்டியது தண்ணீர் ஒன்று தானே.

நாம் இந்த வகையில் மிகவும் கவனக் குறைவாக இருக்கின்றோம். முந்திச்செய்யவேண்டியதைப் பிந்தி செய்கின்றோம். செய்யவேண்டியதைச்·செய்யாமலும் இருக்கின்றோம். செய்யவேண்டாததையும் செய்து கொண்டிருக்கின்றோம்.

மரணபயம் தலைக்குமேலிருக்கின்றது. எந்தக் கணத்திலும் அது வரும். மேலே எறிந்த கல் கீழே விழாமற் போகாது. அதுபோல் உடம்பெடுத்த நாம் மரணமடைந்து தீருவோம். சில சாதனைகள் செய்து பன்னெடுங்காலம் இருந்தோரும் முடிவில் மடிவர். தேவரும், மூவரும், சித்தரும், முத்தரும் மடிவர் என்றால் அற்பர்களாகிய நாம் மடிவதில் என்ன ஐயப்பாடு? அதை மறந்து மெத்தனமாக இருக்கின்றோம்.

மரணபயம் விரைந்து நம்மை வெருட்டுகின்ற இத்தருணத்தில் நாம் அவசரமாகச் செய்யவேண்டியது எது?

நெடுங்காலம் இருக்கவேண்டும் என்று விரும்புவது சரியன்று. இந்த உடம்பு மிகவும் கனமானது. மலஞ் சோரும் ஒன்பது ஓட்டைகளுக்கும், பல நோய்களுக்கும் இருப்பிடம் ஆனது; நாம் இதை சுமக்கவில்லையானால் நான்கு பேர் சேர்ந்து சுமக்கவேண்டும். ஆகவே இந்த உடம்புடன் இருக்க ஆசைப்படக் கூடாது. "வேற்றுவிகார விடக்குடம்பின் உட்கிடப்ப ஆற்றேன்" என்கின்றார் மணிவாசகனார். இந்த உடம்புடன் கூடியிருக்கின்ற நாம் அவசரமாகச் செய்யவேண்டியதைச் செய்யவேண்டும்.

நமக்கு மூன்று உறுப்புக்கள் இருக்கின்றன. அவையாவன;

1. சாங்கம்-(பிரிக்கமுடியாத உறுப்பு) கரசரணங்கள்.
2. உபாங்கம்:-(பிரிக்கத் தக்க உறுப்பு) ஆடை, அணிகலன்கள்.
3. பிரத்தியங்கம்:- (பிரிந்தே இருக்கும் உறுப்பு) நாம் வைத்திருக்கும் பாத்திரம் பண்டங்கள்.

நமக்கு ஒரு பெரிய ஆபத்து வருங்கால் நாம் எதனை அவசரமாகக்காப்பாற்றவேண்டும் என்பதைச் சிந்தியுங்கள். ஒரு யானை விரட்டுகின்றது என்று வைத்துக்கொள்ளுங்கள். சாங்கமாகிய கை கால்களுக்கு வரும் ஆபத்தைத் தவிர்ப்பதா? உபாங்க

மாகிய ஆடை அணிகலன்களுக்கு வரும் ஆபத்தைத் தவிர்ப்பதா? பிரத்தியங்கமாகிய பாத்திரம் பண்டங்களுக்கு வரும் ஆபத்தைத் தவிர்ப்பதா? பாத்திரம் பண்டத்திலும், ஆடை அணியினும், கரசரணங்கள் முக்கியமல்லவா? அவைகளை யல்லவா அவசரமாகக் காப்பாற்றவேண்டும். கை கால் ஒடிந்தாலும் கவலையில்லை. பாத்திரம் பண்டங்கள் பழுதுபடக்கூடாது என்று எண்ணுபவன் அறிவை நாம் என்ன என்று எண்ணுவது?

இனி நாம் என்பது இந்த உடம்பு அன்று; உடம்பு நாம் குடியிருக்கும் வீடு; நாம் என்பது ஆன்மா;

ஆன்மாவுக்குச் சாங்கம் எது? உபாங்கம் எது? பிரத்யங்கம் எது? என்று சிந்திக்கவேண்டும். ஆன்மாவுக்குச் சாங்கம் அறிவு.

உடம்புக்குக் கரசரணங்கள் அன்னியமாகாதவை போல், ஆன்மாவுக்கு அறிவு அன்னியமன்று; ஆன்மாவுடன் அறிவு பிரிவற நிற்பது. அரிசிக்கு வெண்மை நிறம் இயல்பு. ஆனால் தவிடு மூடியிருக்கின்றது. தவிடு போக அரிசியைக் குத்தினால் அரிசிக்கு இயல்பாகிய வெண்மை நிறம் தானே வெளிப்படுகின்றது.

அதுபோல் ஆன்மாவுக்கு அறிவு இயல்பானது. அந்த அறிவை ஆணவமாகிய தவிடு மூடியிருக்கின்றது. ஆணவ அழுக்கு நீங்கினால் ஆன்மாவுக்கு இயல்பாகவுள்ள அறிவு விளங்கித் தோன்றும்.

ஆன்மாவுக்கு உபாங்கம்—உடம்பு.
,, பிரத்யங்கம்—மனைவி, மக்கள், வீடு, நிலம், பொன் முதலியன.

இப்பொழுது சிந்தியுங்கள். ஆன்மாவுக்குச் சாங்கமாகிய அறிவு விளக்கமுற வேண்டுமென்று நாம் முயல்கின்றோமா? இல்லை.

உபாங்கமாகிய உடம்புக்காகச் சிறிது பாடுபடுகின்றோம். இனி பிரத்யங்கமாகிய மனைவி மக்களுக்காகவும், வீடு நிலங்களுக்காகவும், பொன் பொருள்களுக்காகவுந்தான் முழுநேரமும் செலவழிக்கின்றோம். நிலம் பொன் இவைகட்கு இடர் வருமாயின் அவைகளை நீக்குவதற்காக வழக்கறிஞர்களுக்கு ஆயிரக்கணக்கான பொருள் வழங்குகின்றோம்.

உபாங்கமான உடல் நலங்குன்றுவதைக் கூடப் பொருள் படுத்தாமல் பொன் தேடுகின்றோம்.

உபாங்கமான உடம்பை ஒரோ ஒரு சமயத்திலே கவனிக்கின்றோம். அதற்கு நோய் வந்தால் மருத்துவருக்கு நூறு இருநூறு தந்து உடலைப் பாதுகாத்துக் கொள்ளுகின்றோம்.

சாங்கமாகிய அறிவின் வளர்ச்சியைப் பற்றிய சிந்தனை சிறிதேனுமில்லை. அதனை வளர்க்குங் குருநாதரைத் தேடுவதுமில்லை. வறிதே வாழ்நாள் கழிந்தால் பின்னர் மரணமென்ற வெள்ளம் வந்துவிடுமே. அவ்வெள்ளம் வருமுன் அணைபோட வேண்டாமா? ஆகவே அவசரமாக நாம் ஒவ்வொருவரும் அறிவின் வளர்ச்சிக்காக அறிவு நூல்களைக் கற்றும், அறிவின் சிகரமாகிய ஆன்றோரையடுத்தும், அறிவின் வடிவாகிய ஆண்டவனை வேண்டியும் உய்வு பெறுவோமாக.

---

உ

முருகா

# 12. மெய்

கடவுள் ஒருவரே மெய்ப்பொருள். உலகத்தில் காணப்படும் பொருள்கள் யாவும் பொய்ப்பொருள் களேயாகும். இங்கே பொய் என்பதற்கு "நிலைபேறு இன்றி தோன்றி மறைவது" என்பது பொருள். உள்ளனபோல் தோன்றி சிலகாலம் இருந்து பின்னர் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிடுகின்ற பொருள் களை நாம் விரும்புகின்றோம். மெய்ப்பொருளாகிய இறைவனை நாடுகின்றோமில்லை. ஏதோ ஒரு சமயம் நாடினாலும் அந்நாட்டத்தில் வேகமில்லை. அருள் தாக மில்லை. நாள்தோறும் மாண்டு மாண்டு மயானம் போகின்றவர்களைக் கண்டும் மதிமயங்கித் திரிகின் றோம். "அறஞ் செய்யாது அடியோடு இறந்து போனவர் வாழ்வு கண்டும் ஆசையிலே யழுந்தும் மயல் தீர" என்கிறார் அருணகிரிநாதர்.

பொய்ப்பொருளாகிய பொன்மீதும் மண்மீதும் பெண்மீதும் வைத்துள்ள ஆர்வத்தில் இலட்சத்தில் ஒருகூறுவது இறைவன் மீது வைக்கின்றோமில்லை. இங்ஙனமிருப்பின் எங்ஙனே கதி காண்பது?

எத்தனை செல்வம் பெற்றாலும் காணாது என்று மேலும் மேலும் பொருளை யீட்டி மயங்கித் தியங்கி மாள்கின்றார் பலர். மனித வாழ்க்கைக்குச்செல்வமும்

வீடும் மாடும் தேவையானாலும் அளவுக்கு மேற் பட்டுத் தேடுவதால் யாது பயன்? குளிப்பதற்குத் தண்ணீர் தேவைதான். ஒரு நதியில் சென்று நீராடு கின்றோம். இடுப்பளவு, மார்பளவு தண்ணீர் இருந்தால் போதுமே. அல்லது கழுத்தளவு தண்ணீர் இருக் கட்டும். தலைக்குமேல் போகின்ற வெள்ளம் சாணள வும் முழமளவும் ஒன்றுதானே. அதுபோல் ஒரு அளவுக்குச் செல்வம் தேடுவது நியாயம். பல லட்சம் தேடுவதால் பயன் யாது? பல லட்சமுடையவன் பத்து படி அன்னத்தையும் இருபது படி பாலையுமா அருந்துகின்றான்? "இப் பெரும் பணத்தை எவ்வாறு காப்பாற்றுவது?" என்று இடையறாது வருந்துவதைத் தவிர அவன் கண்டபயன் வேறில்லை.

உலகமெல்லாம் ஆண்ட சகரன் எங்கே? திலீபன் எங்கே? அசோகன் எங்கே? பரந்த அரண்மனை புதுக்கிப் பல மனைவியரை மணந்த சரபோஜி எங்கே? அவர்கள் வாழ்வு எங்கே? எல்லாம் பழங்கனவாய் மறைந்துவிட்டன.

மெய்ப்பொருளை நாடிய வள்ளுவரும், நால்வரும், பன்னிருவரும், அருணகிரிநாதரும். தாயுமானாரும் இன்று அமரத்துவம் பெற்று ஒவ்வொருவர் உள்ளத் திலும் உலவி வருகின்றனர். உலகுக்கு இன்றும் நின்று அவர்களுடைய ஞானவாக்குகள் வழி காட்டு கின்றன.

இனி இந்த உடம்பை மெய் மெய் என்று கூறு கின்றோம். நூல்களும் கூறுகின்றன; இது மெய்யா? பொய்யுடல்; மெய்யன்று; நன்கு சிந்தியுங்கள்.

" பொய்யுலகும் பொய்யுறவும் பொய்யுடலும்
பொய்யெனவே
மெய்யநினை மெய்யெனவே மெய்யுடனே
காண்பேனே "

என்கின்றார் தாயுமானார்.

தாலியிழத்தலை தாலி பெருகிற்று என்று கூறுவது போல் மங்கல வழக்காக இப்பொய்யான உடலை மெய் யென்று உபசரித்தனர் என்பர் சிலர்; அற்றன்று.

எரிகின்ற சுடருக்கே விளக்கென்று பெயர். சந்தனமா சாணமா என்று பொருளை விளக்குவதனால் அது விளக்கெனப்பட்டது; திரிக்கும் எண்ணெய்க் கும் இவைகளைத் தாங்கியுள்ள தகளிக்கும் விளக் கென்று பேரில்லை. ஆனால் எரிகின்ற சுடரும், திரியும் எண்ணெயும் இல்லாத தகளித் தண்டை விளக்கு (குத்துவிளக்கு) என்கின்றனர். என்ன பொருளில் அவ்வாறு கூறுகின்றனர்? எரிகின்ற விளக்காகிய சுடர் தங்கியிருப்பதனால் அத் தகளித்தண்டு தானியாகு பெயராக விளக்கெனப்பட்டது. அது போல் மெய்ப் பொருளாகிய இறைவன் இவ் வுடம்பில் தங்கியிருக் கின்றான். ஆதலின் இது மெய்யெனப்பட்டது. கடவுளுடைய பெயராகிய மெய் என்பதை இவ் வுடம்பு பெற்றது என உணர்க.

"உடலிடங்கொண்டாய்" என்பது மணிவாசகம். ஆகவே நீர்க்குமிழிக்கு நிகரான யாக்கை யழியுமுன் உடலிடங்கொண்ட மெய்ப்பொருளை யறிந்து அடை தற்குத் தீவிரமாக முயலுதல் வேண்டும். அதுவே அறிவும் ஆக்கையும் படைத்தார் கடன்.

இனி அம் மெய்ப்பொருளை யன்றி வேறுள்ள பொய்ப்பொருள்களை விரும்புதல் கூடாது.

நாரதர் ஒரு சமயம் பன்னெடுங்காலம் தவம் புரிந்தார். கருணைக்கடலாகிய கடவுள் அவருக்குக் காட்சி யளித்தார். ''நாரத! யாது வரம் வேண்டும்? கேள்'' என்றார்.

நாரதர், ''ஆண்டவனே! மெய்ப்பொருளாகிய நின்னையே விரும்பும் ஒப்பற்ற அன்பை யருளுவீர்'! என்றார்.

கடவுள், ''நாரத! அந்த வரத்தை அருளினேம்; உன் மீதுள்ள கருணையால் இன்னொரு வரமுந் தர விரும்புகின்றேன். இரண்டாவது வரங் கேள்'' என்றார்.

நாரதர், ''தெய்வமே! மெய்ப்பொருளாகிய உன்னை விரும்புவதை யன்றி இன்னொன்றை விரும்பாத தன்மையை அருள்புரிவீர்'' என்றார்.

*''சால நின்கழல் அன்பையே வேண்டுவன் தமியேன்''* என்கிறார் வீரவாகுதேவர்.

ஆகவே பொய்ப்பொருளை மறந்து, மெய்ப் பொருளை நினைந்து மெய்ம்மை பெறுவோமாக.

---

உ

முருகா

# 13. சொந்தம்

நமக்குச் சொந்தமல்லாத பொருளை நாம் நமக்குச் சொந்தம் என்று எண்ணியும், இவை நமக்குச்சொந்தம் என்று கூறியும் மதிமயங்கி நிற்கின்றோம்.

இந்த வீடு நம்முடையது என்கின்றோம். இதற்கு முன் எத்தனையோ பேர் அதனை என்னுடையது என்னுடையது என்று கூறினார்கள். நமக்குப் பின்னர் பலர் அவ்வாறு கூற இருக்கின்றார்கள். இந்த உலகங்கள் யாவும் இறைவனுடையவை. எல்லாவற்றையும் உடையவராதலின் இறைவனுக்கு உடையவர் என்று பேருண்டு. எல்லாம் அவருடைய உடைமை. "உடையானே" என்கின்றார் மணிவாசகர்.

நாம் விலை கொடுத்து நம் பேருக்குப் பதிவு செய்துள்ள நம் வீட்டில் வாழும் பல்லி, எலி, பூனை, எட்டுக்கால் பூச்சி முதலியனவை, அந்த வீட்டை தமக்குச் சொந்தமாகவே எண்ணுகின்றன. அது போல் எல்லாம் இறைவனுடைமையாக இருக்கவும் அவற்றை நம்முடையவை என்று மயங்குகின்றோம். என்னே நமது அறியாமை ?

இனி இந்த உடம்பும் நமக்குச் சொந்தமன்று. இந்த உடம்பு நமக்கு இறைவன் கொடுத்த ஒரு வாடகை வண்டி. இதில் ஏறி நாம் பிரயாணம் பண்ணுகின்றோம். ஒரு குறிப்பிட்ட காலத்தை நமக்கு அளவிட்டுக் கொடுத்துள்ளார். அக் கால எல்லைக்குள் நாம் முத்தியுலகை நாடிப் பிரயாணம் புரியவேண்டும். பெரும்பாலோர் நமன் உலகை நாடியே போய்க்கொண்டிருக்கின்றார்கள். சாமாறே விரைகின்றனர்.

இந்த உடம்பை நெருப்பு எனக்கென்றும், புழு எனக்கென்றும், மண் எனக்கென்றும், பருந்து எனக்கென்றும், நரி எனக்கென்றும், நாய் எனக்கென்றும் கூறுகின்றன. நாம் நம்முடையது என்று கருதி ஜபம், தவம், தியானம், ஆலய வழிபாடு முதலியன ஒன்றும் புரியாமல், வேளை தவறாமல் விலாப்புடைக்க உண்டு இந்த உடம்பை வளர்க்கின்றோம்.

எரியெனக் கென்னும் புழுவோ யெனக்கெனும் இந்த
மண்ணும்
சரியெனக் கென்னும் பருந்தோ எனக்கெனும் தான்புசிக்க
நரியெனக் கென்னும் புன்னாய் எனக்கெனுமிந் நாறுடலைப்
பிரியமுடன் வளர்த்தேன்இத னால்என்ன பேறெனக்கே.

ஆகவே இந்த உடம்பு, செல்வம், வான், காற்று, கனல், புனல், மண், கதிர், மதி முதலிய எல்லாம் இறைவனுடைய உடைமைகள். ஸ்வம்—சொத்து.

எல்லாவற்றையும் சொந்தமாக உடையவராதலின் ஸ்வாமி என்ற பெயரால் ஆண்டவரை அழைக்கின்ளேம்.

முற்றத் துறந்த முனிவர் ஒருவர் திருத்தல யாத்திரை புரிந்துவந்தார். பற்றற்ற பரமஞானியாகிய அவர் இன்றிருந்த ஊர் நாளை இரார். ஒரு வேளையே உப்பில்லாத உணவை உண்டார். அவர் பொய்யை அதிகமாக வெறுப்பவர்.

*' மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு*
*தானஞ்செய் வாரில் தலை '*

என்ற திருக்குறளை இடையருது கூறுவார். அவருடைய வாய் மறந்தும் பொய் புகலாது; அன்றியும் பொய்புகல்வார் மனையில் புசியார். இதனை மிகவும் சிறந்த குறிக்கோளாகக் கொண்டு ஒழுகினுர்.

ஒரு ஊருக்குப் போனுல் அங்கே உண்மை பேசுவோர் யார் எனக் கேட்டறிந்த பின்னர் அவர் வீட்டில் உச்சிப்பொழுதில் ஒரு சிறிது அன்னம் உண்பார்.

ஒருநாள் ஒரு ஊருக்குச் சென்ருர். 'இந்த ஊரில் உண்மையாளர் யாவர்?' என உசாவினுர். 'அதோ தெரிகின்ற மாடிவீட்டில் வாழ்கின்ற முதலியார் உண்மையாளர்; அடியார் பக்தியுடையவர்; ஒரு லட்சம் செல்வமும், நான்கு புதல்வரும் உடையவர்,'' என்று பலரும் பகர்ந்தார்கள். பின்னர் முதலியாருடைய வீட்டை முனிவர் அணுகினுர்.

ஆசனத்தில் அமர்ந்திருந்த முதலியார் உடனே எழுந்தார். ஓடிவந்து ஞானியார் அடிமலர் மீது விழுந் தார். அவரை ஆசனத்தில் எழுந்தருளப் புரிந்து, "பெருமானே! உணவு செய்ய எழுந்தருளவேண்டும்" என்று வேண்டினார். அவருடைய அன்பு அடக்கம் பணிவு முதலிய நற்குணங்களைக் கண்டு முனிவர் முக மலர்ந்து உண்மையாளர்தானா என்று சோதித்தறிந்த பின்னரே உணவுசெய்யவேண்டும் என்று எண்ணினார்.

'ஐயா ! உமக்குச் செல்வம் எவ்வளவு உண்டு?'

''சுவாமி! இருபத்து இரண்டாயிரம் ரூபாயுண்டு'

'குழந்தைகள் எத்தனைபேர்?'

'சுவாமி! ஒரே புதல்வன்தான்'

'உமக்கு என்ன வயது?'

'சுவாமி; எனக்கு வயது மூன்று வருஷம் ஐந்து மாதம் ஏழுநாள் பதினாறரை மணி'

முனிவருக்குப் பெருஞ் சினம் மூண்டது.

"ஐயா! நீர் சுத்தப் புளுகனாக இருக்கின்றீர். நீர் பேசுவதெல்லாம் பெரும் புரட்டு. உம் வீட்டு அன்னம் என் தவத்தை யழிக்கும். நான் பொய்யர் வீட்டில் புசியேன்" என்று கூறி, சீறி விழுந்தார்.

முதலியார் அவர் காலில் விழுந்து, "அருள் நிறைந்த அண்ணலே! அடியேன் ஒருபோதும் பொய் புகலேன்

சத்தியம் சொல்கின்றேன்; சற்று நிதானமாக ஆய்ந்து பார்த்து உண்மையுணர்வீராக'' என்று கூறி தனது வரவு செலவு புத்தகத்தைக் காட்டினுர். அதில் இருப்புத் தொகை ஒரு லட்ச ரூபாய் என்றிருந்தது.

''அடேய்! இதோ உனக்குச் சொத்து ஒரு லட்சமென்றிருக்கிறதே, நீ இருபத்து இரண்டாயிரந் தான் என்று பொய் சொன்னுயே!'' என்று கடிந்தார் முனிவர்.

'' சுவாமீ! ஒரு லட்ச ரூபாய் பெட்டியில் உளது. ஆனுல் பெட்டியில் உள்ள பணம் எனக்குச் சொந்தமாகுமா? இதோ பாருங்கள். தருமக் கணக்கில் இதுகாறும் இருபத்திரண்டாயிரமே செலவழிந்துளது. தருமம் புரிந்த பணந்தானே என்னுடையது; இப்போது நான் மாண்டால் இந்தப் பெட்டியில் உள்ள பணம் என்னுடன் வராதே; உடன் வருவது தருமம் ஒன்றுதானே; ஆகவே எனக்குச் சொந்தம், தருமம் புரிந்த இருபத்திரண்டு ஆயிரந்தான்'' என்று கூறினுர் முதலியார்.

முனிவர் இதைக்கேட்டு வியப்புற்ருர். 'ஆமாம் உனக்கு நான்கு புதல்வர்கள் உண்டு என்று கேள்விப் பட்டேனே ?'

' சுவாமி! எனக்குப் பிறந்த பிள்ளைகள் நால்வர்; ஆனுல் என் பிள்ளை ஒருவன்தான். '

' அப்பா! நீ சொல்வதன் கருத்து எனக்கு விளங்கவில்லையே? '

'சுவாமி! விளங்க வைக்கின்றேன்.

"மகனே! நடராஜா" என்றழைத்தார் முதலியார்.

'சீட்டு விளையாடுகின்றேன். வரமுடியாது' என்று பதில் வந்தது.

'மகனே! வேல்சாமீ!'

'ஏன் இப்படிக் கதறுகின்றாய்? வாயை மூடிக் கொண்டிரு'.

'மகனே! சிவசாமீ!'

உனக்குப் புத்தியிருக்கிறதா? உன்னோடு பேச என்னாலாகாது. பூமிக்குச் சுமையாக இன்னும் ஏன் இருக்கின்றாய்.

'மகனே! கந்தசாமி!'

கந்தசாமி ஓடிவந்து பிதாவையும் முனிவரையும் தொழுது, "சுவாமீ! பால் கொண்டுவரட்டுமா? பழம் கொண்டுவரட்டுமா? என்று கேட்டு உபசரித்து விசிறி எடுத்து வீசிக்கொண்டு பணிவுடன் நின்றான்.

முதலியார், "சுவாமீ! அந்த மூவர்களும் என் புதல்வர்களா? என் கருத்துக்கு முரணானவர்கள் பிள்ளைகளா? போன பிறப்பிற் பட்ட கடன்காரர்கள். இவன் ஒருவன்தான் என் பிள்ளை" என்றார்.

"அப்பா! உன் கருத்து உவகையைத் தருகின்றது. வயது விஷயத்தில் நீ கூறியதன் உட்பொருள் யாது?"

"சுவாமி! அடியேன் நாள் 1-க்கு 1½ மணி நேரந் தான் வழிபாடு செய்கின்றேன். மிகுதி நேரமெல்லாம் வயிற்றுக்காகவும் குடும்பத்துக்காகவும் உழைக் கின்றேன். பேசாத நாள் எல்லாம் பிறவா நாள்தானே. இறைவனைப் பூசிக்கும் நேரந்தான் எனக்குச்சொந்தம். அடியேனுக்கு இந்த உடம்பு பிறந்து அறுபது ஆண்டு கள் ஆயின. ஐந்து வயதிலிருந்து பூசிக்கின்றேன். நாள் ஒன்றுக்கு 1½ மணி நேரம் பூசை செய்கின்றேன். அந்த வகையாகப் பார்த்தால், முப்பதாயிரத்து நூற்றுப் பன்னிரண்டரை மணிநேரம் ஆகின்றது. ஆகவே அடியேன் பிறந்து அறுபது ஆண்டுகளானாலும் எனக்குச் சொந்தவயது திட்டமாக மூன்று ஆண்டு ஐந்து மாதம் ஏழு நாள் பதினாறரை மணிதான்.

(1) தருமம் செய்த பணம் எனக்குச் சொந்தம்.

(2) என்கருத்தை அநுசரிக்கின்றவனே எனக் குச் சொந்த மகன்.

(3) பூசை செய்த நேரம் எனக்குச் சொந்தம்" என்றார்.

இதனைக் கேட்ட முனிவர் பெரிதும் மகிழ்ந்தார். அவர் வீட்டில் உண்டு வாழ்த்திவிட்டுச் சென்றார்.

———

உ

முருகா

# மேன் மக்கள்

" மாவு மாக்களும் ஐயறிவினவே
மக்கள் தாமே ஆறறிவுயிரே "

என்கிருர் தொல்காப்பியர். ஆறறிவு படைத்த மக்களில் மூன்று பிரிவுகள் உண்டு (1) கிழ்மக்கள். (2) மக்கள். (3) மேன் மக்கள் என்பவை.

(1) கிழ்மக்கள்;—மக்களாகப் பிறந்தும் மாக்களைப் போல் (விலங்குகளைப்போல) உண்பதும் உறங்குவதும் பொருந்துவதுமாகவே காலங் கழிப்பார் கீழ் மக்கள். பசி தாகங்களை அவிப்பதிலேயே நாட்டமுடையவர்.

(2) மக்கள்;—மக்கள் பண்பாட்டைப் பெற்று ஈவு, இரக்கம், சாந்தம், சீலம் முதலிய நற்குணங்களை யுடையவராய் வாழ்பவர்.

(3) மேன்மக்கள்:—மக்கட் பண்பாட்டைப் பெற்றதோடு அமையாது தெய்வத்தன்மை பெற்று, அருளாளராய், பிறருக்கென்றே வாழ்பவராய், ஒவ்வொரு மூச்சும் உலகம் உய்யும்பொருட்டே விடுபவராய் வாழ்பவர்.

நம்மில் பலர் மக்களென்ற பேரும் வடிவுங் கொண்டு மாக்கள் போலவே அருந்துதல் பொருந்துதலுடன் அமைந்து, துன்பத்தை இன்பமாக மயங்கி எண்ணி ஆமைபோல் தெளிவின்றித் திரிகின்றனர்.

ஆமையைக்கொன்று தின்போர் அதன் முதுகில் கெட்டியான ஓடு இருப்பதால், அதனை எளிதில் கொல்ல அடியிற் கண்டவாறு முயலுவர்.

மூன்று கற்களின்மீது பெரிய இருப்புக் கொப்பரையை வைத்து, நிரம்பத் தண்ணீர் விட்டு, தீயை மூட்டி, அதில் ஆமையை விடுத்து, மேலே ஒரு தட்டை மூடிவிடுவர். ஆமைக்கும் தண்ணீருக்கும் உறவு; அதனுல் நீரிலுள்ள ஆமை தனக்குச் சுவர்க்க லோகம் கிடைத்திருப்பதாக எண்ணி இப்படியும் அப்படியுமாக நீரில் நீந்தி விளையாடும். தண்ணீர் சூடு ஏறி கொதிப்புற்றவுடன் அடிப்பகுதியில் சதையுள்ள ஆமை மாண்டு ஒழியும்.

அதுபோல, வாதபித்த சிலேத்துமமாகிய மூன்று கற்களின்மீது உடம்பாகிய இருப்புக்கொப்பரையைக் கூற்றுவனுகிய கொலேஞன் வைத்து ஆசையாகிய தண்ணீரை வீட்டு, ஆன்மாவாகிய ஆமையை அதில் விடுத்து, பிராரப்த கன்மமாகிய தீயை மூட்டி, பந்த பாசமாகிய தட்டினுல் மூடி வைத்திருக்கிருன். துன்பத்தை இன்பமாக எண்ணி ஆமை நீரில் நீந்தி விளையாடுவதுபோல் ஆன்மாவாகிய நாம் தடுமாறுகின்றோம்.

வளைத்துநின் றைவர்கள்வர் வந்தெனை நடுக்கஞ் செய்யத்
தளைத்துவைத் துலையை யேற்றித் தழலெரி மடுத்த நீரில்
திளைத்துநின் றுடுகின்ற ஆமைபோல் தெளிவி லாதேன்
இளைத்து நின்றுடுகின்றேன் என்செய்வான்
தோன்றினேனே.

இவர்களைப்பற்றி வள்ளுவரும் அதிசயித்து உரைக்கின்றனர்.

மக்களே போல்வர் கயவர் அவரன்ன
வொப்பாரி யாங்கண்ட தில்.

இனி மக்கட் பண்புகொண்டு இப்பெரு நிலத்தில் வாழ்வோர் சிலர் உளர். மனித வாழ்க்கைக்குப் பண்பாடு உயிர்போன்றது. இதனைஒவ்வொருவரும் இனிது ஓம்பி உய்வு பெறவேண்டும்.

இம் மக்கட் பண்பாடு உயர்ந்து நிறைவு எய்திய பின் தெய்வத்தன்மை வந்து சேரும். அத்தன்மை எய்தினோர் மேன்மக்களாவார்கள். அம்மேன்மக்கள் உயிருடன் உலகில் வாழும்பொழுது தமது உரை வளத்தாலும், உள வளத்தாலும், உணர்வு வளத்தாலும், உலகை உய்யக்கொள்வர். இவர்கள் பூத உடம்பு நீங்கியபின்னும் தமது அளவற்ற ஆத்ம சக்தியால் உலகுக்கு நன்மைபுரிவர். ஆதலால் இவர்கள் உடம்பு நீங்கி மாண்டவரே யாயினும் ஆண்டவனருளால் அமரத்வம் பெற்று என்றும் இருப்பவரே யாவார்கள்.

காட்டிலேவளர்ந்த சாதாரண மரங்களை வெட்டிக் குவித்தால் அவற்றை விறகு என்பர். அவற்றை விற்கும் கடைக்கு விறகுக் கடை என்றுபேர். தேக்கு முதலிய ஜாதி மரங்களை வெட்டிக் குவித்தாலும் அவற்றை மரமென்றே கூறுவர். அவற்றை விற்கும் கடைக்கு மரக்கடை என்று பேர். ஆகவே தேக்கு முதலிய மரங்கள் வெட்டுப்பட்டும் விறகென்று பேர் பெறுமல் மரமென்றே பேர் பெறுவது போல், மேன்மக்கள் இறந்தும் என்றும் இருப்பவர்களாகவே அமரத்வம் பெறுகிறார்கள். இந்த வரிசையில் நிற்பவர்கள் திருவள்ளுவர், சேக்கிழார் அடிகள் ஆகியோர் மேன்மக்களாவார்கள். மேலும் மேன்மக்கள் ஒரொருகால்

தம் நிலையினின்றும் குன்றினாலும் தம்முடைய அருட் பண்பினின்றும் குன்றமாட்டார்கள். இவர்கட்கு மானமே லட்சியமாகத் திகழும், இதனைக் கீழேவரும் இனிய வரலாற்றால் அறிக.

சேரநாட்டைச் செங்நெறி நின்று செங்கோல் செலுத்திக் கணைக்காலிரும்பொறை என்ற மன்னன் அரசு புரிந்தனன். அவனுடைய உயிர்த் தோழர் பொய்கையார் என்பவர். இவர் பெரும் புலவர். இப் புலவருடைய தோழமையால் கணைக்காலிரும் பொறையின் புகழ்க் கதிர் பூவுலகமெங்கும் வீசியது. வாள் வலியாலும் தோள்வலியாலும் மிக்க சோழ மன்னன் செங்கணானென்பவன் பொய்கையார் தொடர்பினால் தானும் புகழ் பெற விழைந்தான். பொய்கையாரைத் தம்மிடம் வந்திருக்குமாறு தூதரை விடுத்து அழைத்தான். பொய்கையார், சோழநாடு வளமை மிக்கதென்றும் சோழன் செல்வச்சிறப்புடை யவனென்றும் அறிந்தும் சேரனிடமுள்ள நட்பின் தகைமையால் அவனைவிட்டுப் பிரிய மாட்டாதவராய் சோழனிடம் செல்ல மறுத்துவிட்டனர்.

சோழன் பொய்கையாரைத் தன்பால் அனுப்பி வைக்குமாறும், இல்லையேல் செருக்களத்திற்கு வருமாறும் கூறித்தூதரை அனுப்பினன். கணைக்காலிரும் பொறை புலவருடைய உரிமையில் குறுக்கே நில்லாமல் சேனைகளுடன் போருக்குப் புறப்பட்டு வந்தான். சோழனுக்கும் சேரனுக்கும் கடும்போர் நடந்தது. இறுதியில் உறுதியுடைய சோழன் வென்று சேரனைச்

சிறைப்படுத்தினன். சேரன் சிறையில் கிடந்து அல்ல லுற்றனன்.

பொய்கையார் இதனை யறிந்து நண்பனுடைய சிறை மீட்கவேண்டி சோழன்பால் வந்து களவழி நாற்பது என்ற நூலைப் பாடினர்; அதனைக் கேட்ட சோழன் பெரிதும் மகிழ்ந்து அவரை வணங்கி பெரும் பரிசில் தர முயன்றனன். பொய்கையார் பரிசிலை மறுத்துத் தமது நண்பன் கணைக்காலிரும்பொறை யைச் சிறையிலிருந்து விடுவதையே பரிசிலாக வேண்டினர். அதற்கிசைந்த செங்கணன் பொய்கை யாருடன் சேரர்கோனைச் சிறை மீட்கும்பொருட்டுச் சிறைச்சாலையில் நுழைந்தான்.

சிறையில் சேரர்கோன் தண்ணீர் விடாயால் வருந்திச் சிறைக் காவலனை நீர் தருமாறு கேட்டனர். அவன் சற்று அலட்சியமாகவும் தாமதமாகவும் நீர் கொணர்ந்து அவரை மதியாமல் ஒரு கரத்தால் நீரை நீட்டினன். சேரமன்னன் அந்நீரை வாங்கி உண்டு உயிர் வாழ விரும்பாதவராய் "இறைவா!" என்று அழைத்தார். அவர் உடம்பினின்றும் உயிர் பிரிந்து விட்டது. சிறை நீக்க வந்த செங்கணனும் பொய்கை யாரும் உடற் சிறையினின்றும் நீங்கிய அவரைக் கண்டு அலக்கணுற்றனர். பொய்கையார், "நண்பா!" என்றனர். அவர் ஆவியும் அகன்றது. கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே; சங்கு சுட்டாலும் வெண்மைதரும்.

---

உ

முருகா

# 15. பக்தி

யுகங்கள் நான்கு; கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்பன;

கிருதயுகத்தில் ஞானத்தினுல் முத்தி.
திரேதாயுகத்தில் தானத்தினுல் முத்தி.
துவாபர யுகத்தில் யாகத்தினுல் முத்தி.
கலியுகத்தில் பக்தியினுல் முத்தி.

பக்தி என்பது வடமொழி. அன்பு என்பது தென்மொழி. பக்தி என்ற வலையில்தான் கடவுள், அகப்படுவார்.

"பத்தி வலையில் படுவோன் காண்க"—திருவாசகம்.

அன்பெனும் பிடியுள் அகப்படு மலையே
அன்பெனுங் குடில்புகும் அரசே!
அன்பெனும் வலைக்குள் படுபரம் பொருளே
அன்பெனுங் கரத்தமர் அமுதே.

அன்பெனுங் கடத்துள் அடங்கிடுங் கடலே
அன்பெனும் உயிர் ஒளிர் அறிவே
அன்பெனும் அணுவுள் அமைந்தபே ரொளியே
அன்புருவாம் பர சிவமே.

அன்பு இல்லாத ஒருவன் மனிதன் ஆகமாட்டான். திருவள்ளுவர் அன்பிலாத ஒருவனைப் பிணம்

என்று கூட சொல்லவிரும்பவில்லை. பிணம் பலருக்குப் பணந் தரச்செய்து உதவுகின்றது. ஆதலால் அன்பில்லாத ஒருவனை என்புதோல் போர்த்த உடம்பு என்கின்றார்.

அன்பின்வழிய துயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு.

இனி பக்திக்குச் செல்வம் குலம் இடம் ஆகிய இத்தகைய தடை இல்லை.

தண்ணீர்ப்பந்தல் வைக்கவேண்டுமானால் செல்வம்வேண்டும். செல்வம் இன்றிதொடங்கினால் இரண்டு நாள் கூட அத்தருமத்தை நடத்த முடியாது.

பக்தி பரம தரித்திரர்களும் புரியலாம். மிக்க வறியவராகிய குசேலமுனிவர் பக்தி செய்து திருவருள் பெற்றார்.

தண்ணீர்ப் பந்தல் அமைக்கக் காலம் வேண்டும். ஐப்பசி மாதம் அடை மழை பொழியும்போது ஆற்றோரம் தண்ணீர்ப்பந்தல் வைத்து, "ஐயா! நல்லமோர் பருகுங்கள்" என்றால் எவன் பருகுவான். "அட மூடனே! உனக்கு அறிவில்லையா, இந்த மழையிலா மோர் குடிப்பது?" என்பான். ஆதலால் தண்ணீர்ப் பந்தல் கோடைகாலத்தில் வைக்கவேண்டும். எனவே தண்ணீர்ப்பந்தர் வைக்கக் காலம் பார்க்கவேண்டும்.

பக்தி செய்வதற்குக் காலம் தடை புரியாது. மழைக்காலம், வெயிற்காலம், பனிக்காலம், இரவு, பகல், காலை, மாலை எந்நேரத்திலும் பக்தி செய்யலாம்.

இருக்கினும் நிற்கும் போதும்
இரவு கண் துயிலும் போதும்
பொருக்கென நடக்கும்போதும்
பொருந்தியூண் துய்க்கும்போதும்
முருக்கிதழ் கனிவா யாரை
முயங்கிநெஞ் சழியும்போதும்
திருக்களா வுடைய நம்பா
சிந்தையுன் பால தாமே.

மேலும் தண்ணீர்ப்பந்தர் இடம் பார்த்து வைக்க வேண்டும். ஒரு குன்றின்மீது வைத்துவிட்டு சாலையில் ஒருவன் நின்று, வெய்யிலில் நடந்து களைத்துப் போன ஒருவனைப் பார்த்து, "ஐயா நீர்மோர் பானகம் வேண்டுமா?" என்றான்.

பிரயாணி, "ஆம்! நாவறட்சி பொறுக்க முடியவில்லை. நீர் மோர் பானகம் எங்கே? கொஞ்சம் கொடுத்து என் உயிரைக் காத்து உதவும்" என்றான்.

"ஐயா! அதோ அந்த மலைமீது வைத்துள்ளேன்; வாரும்" என்றான்.

"அட பாவீ! பத்துபேர் நடக்கின்ற சாலையில் வைக்கக்கூடாதா? ஐயோ அந்த மலைமீது ஏறுவதற்குள் என் உயிர் பிரிந்துவிடுமே? நீர்மோரே வேண்டாம்" என்பான்.

ஆனபடியால் தண்ணீர்ப்பந்தர் இடம் நோக்கி அமைக்கவேண்டும்.

இங்கே பக்திக்கு அந்தத் தடையும் இல்லை. எந்த இடத்திலும் பக்தி செய்யலாம். பள்ளம், மேடு, காடு,

வீடு எங்கிருந்தும் பக்தி செய்யலாம். பக்தியில்லாமல் வெறும் துறவு பூண்டு காட்டிலிருப்பினும், காற்றைப் பருகினும், கந்தை யுடுத்தி ஓட்டை யெடுப்பினும் உய்வு பெறமாட்டார்கள். பக்தியுடையவர்கள் தமது தரும பத்தினியுடன் வீட்டிலிருப்பினும் மெய்ஞ்ஞான வீட்டை யடைவார்கள்.

பட்டினத்துச் சுவாமிகள் கூறுகின்றார்.

காடே திரிந்தென்ன ?
காற்றே புசித்தென்ன ? கந்தைசுற்றி
ஓடே எடுத்தென்ன ?
உள்ளன்பிலாதவர் ஓங்கு விண்ணோர்
நாடே யிடைமரு தீசர்க்கு
மெய்யன்பர் நாரியர்பால்
வீடே யிருப்பினும் மெய்ஞ்ஞான
வீட்டின்பம் மேவுவரே.

இனி பக்திக்குக் குலம் முதலிய தடையும் இல்லை. உயர் குலத்தினர்தான் பக்தி செய்யவேண்டும். இழி குலத்தார் பக்தி செய்தல் கூடாது என்ற நியதியில்லை, "இறைவனிடம் பக்தியில்லாதவர் பெருங்குலத்திற் பிறந்து பெருஞ் செல்வராகி எனக்கு மண்ணுலக வாழ்வும் விண்ணுலகரசுந் தந்து உதவி புரியினும் அவரை நான் ஒரு பொருளாக மதிக்கமாட்டேன்; சிவ பெருமானுடைய திருவடியில் அன்பு வைத்தவர் அங்கம் அழுகிய தொழுநோயராயினும் பசுவை யறுத் துண்ணும் புலையர் குலத்தில் பிறந்தாரேனும், அவர்கள் எமது வழிபடு கடவுளர் ஆவார்" என்கின்றார் திருநாவுக்கரசு சுவாமிகள்.

சங்கநிதி பதுமநிதி இரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவரேனும்
மங்குவார் அவர் செல்வம் மதிப்போ மல்லோம்
மாதேவர்க் கேகாந்த ரல்லராகில்
அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக் கரந்தார்க் கன்பராகில்
அவர்கண்டீர் நாம்வணங்குங் கடவுளாரே.

அன்பைப் பெற்றுவிட்டால் அதுவே எல்லா வற்றையும் பெற்றுவிட்டதாகும், அன்பை யுடையார் என்பையும் பிறர்க்கு வழங்குவார்கள். அன்பு என்ற பக்தி, சித்தியையும் முக்தியையுந் தரும். பரமனும் பக்தருக்கு வாய்த்தவராகத் திகழ்கின்றார்.

“பத்தி சித்தி காட்டி அத்தர் சித்தமீட்ட
பக்தருக்கு வாய்த்த பெருமாளே” —திருப்புகழ்.

பக்தியினால் விளைந்த விளைவுகளைப் பற்றி ஆதி சங்கரர் வியந்து கூறுகின்றார்.

(1) மார்க்கத்தில் தேய்ந்த பழஞ் செருப்பு சிவ பெருமானுடைய புருவ நடுவில் சென்றது,

(2) கொப்புளித்து உமிழ்ந்த நீர் அப்பரமனுக்குச் சிறந்த அபிஷேகமாகியது.

(3) சிறிது கடித்து எச்சில் செய்த புலால் துண்டு உயர்ந்த உணவாக ஆயிற்று;

(4) வேடன் பக்தசிரோன்மணியாக ஆனான்.

ஆகவே பக்தி எதைத்தான் செய்யாது? எல்லா வுயர்வையுந் தரும்.

மார்க்கா வர்த்தித பாதுகா
பசுபதே ரங்கஸ்ய கூர்ச்சாயதே
கண்டுஷாம்பு நிஷேசனம்
புரரிபோர் திவ்யாபிஷேகாயதே
கிஞ்சித் பக்ஷித மாம்ஸ சேஷ
கபளம் நவ்யாப ஹாராயதே
பக்தி: கிம் நகரோத்யஹோ
வநசரோ பக்தாவதம்சாயதே.

—சிவானந்தலஹரீ.

பக்தியுடன் பகவானுடைய திருநாமங்களை ஒரு முறை கூறினும், வினைகள் வெந்து நீறாகும். சகல நலன்களும் உண்டாகும்.

நாரதர் ஒரு சமயம், வைகுண்டம் சென்றார். விஷ்ணு மூர்த்தியை வணங்கினார். "சுவாமி! உலகிலே உள்ள மனிதர்கட்கு உன் திருவடியடைய எளிய வழி யாது?" என்று வினவினார்.

திருமால் 'நாரதா நம்மை யடைவதற்குரிய நெறி களில் மிக எளிமையானது பக்திநெறியாகும்" என்றார்.

நாரதர் "ஐயனே! அந்தப் பக்தி நெறி நின்ற பக்தர் களில் தலை சிறந்த பக்தன் யாவன்?" என்று வினு வினார். நாரதருடைய மனதில், தன்னைக்கூறுவார் என்ற நினைவு இருந்தது. தான் பெரிய பக்தன் என்ற ஒரு செருக்கும் சிறிது இருந்தது. எல்லாம் உணர்ந்த பகவானுக்கு இது தெரியுந்தானே.

"நாரதா! பூவுலகில் குப்பம் என்ற சிற்றூரிலே பொன்னன் என்ற ஒரு குடியானவன் இருக்கின்றான். அவன் தான் எனது பெரிய பக்தன்" என்றார்.

இதனைக்கேட்ட நாரதருக்குப் பெரிய வியப்பு உண்டாய்விற்று. நாராயணரைத் தொழுதார், "சுவாமீ! அடியேன் உமது திருநாமத்தை இடையருது பாராயணம் புரிபவன். என்னைக் கூருமல் எங்கோ இனந் தெரியாத ஒருவனைப் பெரிய பக்தன் என்கின்றீரே, இது பொருந்துமா?" என்று கேட்டார்.

"நாரதா! நீ சென்று அவனுடைய பக்தியை நேரில் அறிந்துகொள்" என்ருர் நாராயணர்.

நாரதர் குப்பம் போனுர். விடியற் காலையிலிருந்தே பொன்னனைக் கவனித்தார். அவன் ஏர்க்காலை எடுத்து தோள்மீது வைக்கும்போது "அரிநாராயணு" என்ருன். பின்னர் உழுவதும் நாற்று நடுவதும் களை பறிப்பது மாகப் பல அலுவல்களில் ஈடு பட்டான். மாலையில் வீடு வந்து ஏர்க்காலை வைக்கும்போது "அரி நாராயணு.' என்ருன். உண்டு உறங்கினுன்.

நாரதருக்கு அடக்கமுடியாத சீற்றம். ஓடினுர். வைகுண்ட வாசனைக் கண்டார். "பெருமானே! நான் லட்சாதி லட்சம் முறை நாரா்யண மந்திரம்கூறுவேன். அந்தப் பொன்னன் ஏரை எடுக்கும்போது ஒருமுறை, அதனைக் கீழே எறியும்போது ஒருமுறை ஆக இரு முறைதான் நாராயணு என்று கூறினுன். தேவரீர் அவனைப் பெரிய பக்தன் என்றீரே? இது என்ன முறை?" என்று வினுவினுர். அவர் குரலில் ஒரு பதட்டம் இருந்தது.

"நாரதா! சற்று அவசரப்படாதே. அந்தப் பொன்னனுக்கு அதிக வேலையா?"

"ஆம் சுவாமி!"

"அத்தனை அலுவல்களுக்கு இடையே என்னை இருமுறை மறவாமல் கூறினானா?"

"ஆம்; இருமுறை மட்டும் கூறினான்".

"பொன்னன் எத்தனை முறை தங்கள் திருநாமம் கூறுகின்றான் என்பதைக் கவனித்துக்கொண்டிருந்தேன்."

"நாரதா! இன்று நீ எத்தனை முறை நாமத்தினை நவின்றாய் ?'

"ஒரு முறைகூடக் கூறவில்லை."

"ஓ! ஒருமுறையும் உரைக்கவில்லையா ? ஏன்?"

"அவனையே உற்றுக் கவனித்துக்கொண்டிருந்து விட்டேன்".

"நீ ஒரு வேலையை மேற்கொண்டு அடியுடன் என்னை மறந்துவிட்டனையே ! அவன் அத்தனை வேலைகளுக்கு இடையே என்னை மறவாது கூறினானே; அவன் பெரிய பக்தன்தானே!" என்று விஷ்ணுமூர்த்தி விளக்கிக் கூறினார்.

நாரதர் தலைகுனிந்து நின்றார். இதனால் குடும்ப விவகாரங்களில் ஈடுபட்டவர்கள் இறைவனை உள்ளன்புடன் நினைத்து, அவரது திருப்பேரைக் காதலாகிக் கசிந்து கூறி அருள்நூல்களைப் பாராயணம் புரிய வேண்டும்.

அந்த அன்பையும் ஆண்டவனிடம் வரமாக யாசித்துப் பெறவேண்டும். "இறவாத இன்ப அன்பு" வேண்டினார் காரைக்காலம்மையார்.

வீரவாகுதேவர் முருகரிடம் வரம் கேட்கின்றார்.

கோல நீடிய நிதிபதி
வாழ்க்கையும் குறியேன்
மேலை இந்திரன் அரசினைக்
கனவினும் வெஃகேன்
மாலயன்பெறு பதத்தையும்
பொருளென மதியேன்
சால நின்பதத் தன்பையே
வேண்டுவன் தமியேன்.

அந்த நல்வரம் முத்தியின்
அரியதொன் றதனைச்
சிந்தை செய்திடு தவத்தரும்
பெறுகிலர் சிறியேன்
உய்ந்திடும் வகை அருள்செய
வேண்டும் என்றுரைப்ப
எந்தை கந்தவேள்
உனக்கது புரிந்தனம் என்றான்.

ஆதலால் பெறுதற்கரிய பேறு பக்தியேயாகும்.

"பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி",

மணிவாசகரைச் சிவபெருமான் ஆட்கொண்டருளினார். எனவே பக்திநெறி வளர்க, பக்தர்கள் வாழ்க.

---

உ

முருகா

# 16. அடக்கம்

மனிதனுடைய நற்குணங்களில் நனிசிறந்து விளங்குவது அடக்கம் என்பது. கல்வி கேள்வி செல்வம் குலம் பட்டம் பதவி முதலிய பல இருப்பினும் அடக்கம் என்று ஒன்று இல்லையானால், அவன் சிறப்படையான். ஒரு குழம்பில் புளி, மிளகு, காயம், காரம் என்பன பல இருப்பினும் உப்பு என்ற ஒன்று இல்லையானால் உண்பதற்கு உகந்ததாக ஆகாது. உணவுக்கு உப்பு இன்றியமையாததுபோல் வாழ்வுக்கு அடக்கம் இன்றியமையாதது.

திருவள்ளுவர் தமது சுருங்கிய நூலில் அடக்கத்திற்கு ஒரு முக்கியத்துவந் தந்து அடக்கமுடைமை என்ற அதிகாரம் அமைத்துப் பத்துத் திருக்குறள் பாடியிருக்கின்றார்.

பணிவு என்ற இந்த அரிய குணம் அநேகருக்கு அமைவதில்லை. பணிவுடையார் தமது வாழ்வில் சிறப்புறுவார்கள்.

தண்ணீர் இறைக்கும் ஏற்றம் பணிவதனால் கிணற்றிலுள்ள நீரை முகக்கின்றது, அங்ஙனம் ஆன்றோர்களிடம் பணிந்தால் அவர்கள்பால் தேங்கிக் கிடக்கும் அறிவு வெள்ளத்தை நாம் முகந்துகொள்ளலாம்.

பணிவதனுல் ஒன்றும் நமக்கு இழிவு வந்து விடாது. அது நமது பெருமையைப் புலப்படுத்தும். துலாக் கோலில் தாழ்ந்த தட்டுக்குத்தானே பெருமை? காய்த்துப் பழுத்துப் பயனுடைய மரக்கிளை தாழ்ந்து இருக்கும். காய் கனி இல்லாத கிளைகள் உயர்ந்து நிற்கும். எதற்குப் பெருமை? தாழ்ந்த கிளைக்கா? உயர்ந்த கிளைக்கா? உன்னிப் பாருங்கள்.

"எல்லார்க்கும் நன்ரும் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து"

என்பார் திருவள்ளுவர்.

## பணிவிஞல் உயர்ந்தவர் ஸ்ரீராமர்

விசுவாமித்திரர் இராமரையும் இலட்சுமணரையும் அழைத்துக்கொண்டு மிதிலாபுரிக்குச் சென்று ஜனகருடைய அரசவையில் அமர்ந்திருக்கின்ருர். ஆசிரியராகிய விசுவாமித்திரருடைய அருகில் தம்பி லட்சுமணருடன் ஸ்ரீராமர் ஓராசனத்தில் அமர்ந்திருக்கின்ருர். உருத்திரருடைய வில்லைப்பற்றிச் சதானந்தர் கூறினுர். அந்தப் பெரிய வில்லை பலர் ஒன்றுகூடிக்கொணர்ந்துப் ஒரு மேடை மீது வைத்தார்கள்.

"இந்த வில்லை நீ எடுத்து வளைப்பதுபோல் ஒடித்து எறிவாய்'' என்று வாய்விட்டுக் கூருமல் கண் குறிப்பினுல் ஸ்ரீராமரை விசுவாமித்திரர் பார்த்தார். ஸ்ரீராமர் அந்தக் குறிப்பை யுணர்ந்து இந்த வில்லை ஒடித்தெறியுமாறு நமது குருநாதர் குறிப்பினுல் உணர்த்துகின்ருரே? என்று கருதி அந்த வில்லைப் பார்க்கின்ருர்.

நினைந்தமுனி பகர்ந்தவெலாம் நெறியுன்னி-
[அறிவனுந்தன்
புனைந்தசடை முடிதுளக்கிப் போரேற்றின்-
[முகம்பார்த்தான்
வனைந்தனைய திருமேனி வள்ளலும்அம்-
[மாதவத்தோன்
நினைந்தவெலாம் நினைந்தந்த நெடுஞ்சிலையை-
[நோக்கினான்.

இது கம்பநாடருடைய திருவாக்கு.

இங்கே ஸ்ரீராமரை வனைந்தனையதிருமேனி என்று குறிக்கின்றார். என்ன பொருள்? சித்திர வல்லுனன் எழுதி வைத்த அழகிய ஓவியம் போன்றவன். என் கின்றார். நன்கு கூர்ந்து சிந்தியுங்கள்.

இந்த சொற்றொடர் இராகவனுடைய அழகைப் புலப்படுத்துவதற்காக வந்ததன்று; ஏன்? அப் பெருமான் ஓவியத்திற்கு அடங்காத அழகுடையவன் மணிமகுடத்தையும் அணிகலன்களையும் பட்டாடை யையுந் துறந்து, மரவுரியையும் சடைமுடியையும் புனைந்து நின்ற திருக்கோலத்தைக் கண்டு வெறுத் துரைக்க வந்த வாலியே "ஓவியத் தெழுத வொண்ணா உருவத்தோய்" என்று அழைக்கின்றான். 'சித்திர வல்லுனனால் எழுதமுடியாத அழகுடையவனே' என்று கூறுகின்றான் வாலி. அவன் இப்போது ஸ்ரீராமரிடம் மாறுபட்டவனாய்ப் பேசுகின்ற சமயம். மாறுபட்ட ஒருவனுக்குத் துறவு நிலையில் உள்ள ராமர் திருவுருவம் சித்திரக்காரனால் வனைய முடியாதது என்று தோன்றுமானால், திருமணத்திற்கு முன் சகல

அணிகலன்களுடன் அரசவையில் அமர்ந்திருக்கும் திருக்கோலம் ஓவியத்தில் எழுதியது போன்றது என்ருல் முன்னுக்குப் பின் முரணுமன்ரு? எனவே இதற்கு என்ன பொருள்?

நன்மாணுக்கர் ஆசிரியர் அருகில் இருக்கும்போது கைகால் மெய் இவைகளே அசைக்காமல் சித்திரம் போல் இருப்பர். இதனைக் குறிப்பிடுகின்ருர் கம்பர். நன்மாணுக்கர் ஆசிரியரிடம் "சித்திரத்தகவின் வித்தகத் தடங்கி" நிற்பர் என்று அவரியல்பு கூறவந்த இலக்கண நூல் இயம்புகின்றது. ஆகவே இங்கே ஸ்ரீராமர் குருநாதராகிய விசுவாமித்திரரது அருகில் சித்திரம் போல் அடக்கமாக ஆடாமல் அசையாமல் இருந்தார் என்று அவருடைய அடக்க நிலையைக் கவிச் சக்ர வர்த்தி "வனைந்தனைய திருமேனி வள்ளல்" என்று நமக்குப் படம் பிடித்துக் காட்டுகின்ருர். இந்த சொற்ருெடரின் மாண்புதான் என்னே! ஸ்ரீராமரைச் சீடராகப் பெற்ற விசுவாமித்திரரைப் புகழ்வதா? சக்ரவர்த்தித் திருமகன் ஒரு ஏழை சன்யாசியிடம் அடங்கியிருக்கின்ற அருமையைப் புகழ்வதா? இதனை மிக நுணுக்கமாக நமக்கு அறிவிக்கின்ற கம்பநாடரது கவித்திறத்தைப் புகழ்வதா?

## அர்ச்சுனனது அடக்கம்.

பாண்டவர்களும் துரியோதனுதியரும் அத்தின புரத்தில் கிருபாச்சாரியாரிடம் குருகுலவாசம் புரிந்து கல்வி பயின்றுகொண்டிருந்தார்கள்.

கிருபாச்சாரியருடைய மைத்துனர் துரோணாச்சாரியர்; இவர் கானகத்தில் தவத்தை மேற்கொண்டு வாழ்ந்தனர். துரோணருடைய தவத்தினால் அவருடைய மனைவி கிருபியிடம் அச்வத்தாமா பிறந்தனர். அக்குழந்தை பாலின்றி வருந்தியழுதது. குழந்தையின் நலங்கருதி துரோணர் தனது பள்ளித்தோழன் துருபதனிடஞ் சென்றார். நட்பருமை யறியாத கயவனாகிய துருபதன் துரோணரை அவமதித்தான். அதனால் மனம் புண்பட்ட அவர் அத்தினபுரத்தை நோக்கி வந்துகொண்டிருந்தார். நகருக்கு அருகில் மாணவர்கள் விளையாடும் இடம்.

பாண்டவர்களும் துரியோதனாதியரும் பந்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். பந்து ஒரு படித்துறையில்லாத கிணற்றில் விழுந்துவிட்டது. அதனை எடுக்கும் வழியறியாது இருதிறத்துப் பிள்ளைகளும் கிணற்றைச் சுற்றி நின்று திகைப்புற்றிருந்தார்கள்.

மனைவியுடனும் மகனுடனும் அழுக்குத்துணியுடுத்து, தாடியும் மீசையுமாக வருகின்றார் துரோணர். நகரவாசிகளும் அரச குமாரர்களுமாகிய இவர்கள் அவரை எப்படி மதிக்கக்கூடும்?

துரோணர், "குழந்தைகளே! படிக்கின்ற நீங்கள் இப்போது இக் கிணற்றைச் சுற்றி நிற்கின்ற காரணம் யாது?" என்று வினவினார்.

அவருடைய தோற்றம் அப்பிள்ளைகளுக்கு அவரிடம் மதிப்பை யுண்டாக்கவில்லை. "நாங்கள்

எதற்காக நின்ருல் உனக்கென்ன ? உன்வேலையைப் பார்த்துக்கொண்டு போ": என்று அலட்சியமாகக் கூறினுன் துரியோதனன். மற்றபிள்ளைகளும் துரோணரைப் பரிகசித்தார்கள். நட்சத்திரக் குழுவின் இடையில் இளம் பிறை திகழ்வதுபோல் திகழ்ந்த அர்ச்சுனன் மட்டும் துரோணரைத் தொழுது, "சுவாமி! வணக்கம். நாங்கள் குருகுலத்து அரசகுமாரர்கள். பந்து கிணற்றில் விழுந்துவிட்டது. அதனை எடுக்க வகையறியாது திகைக்கின்ருேம்" என்ருன்.

துரோணருக்கு அர்ச்சுனனுடைய அடக்கமான குணம் பெரு மகிழ்ச்சியைத் தந்தது. அர்ச்சுனனுடைய இனிய சொல் அவருடைய உள்ளத்தை உருக்கியது.

"தம்பி! நீங்கள் யாரிடம் படிக்கின்றீர்கள்?"

"நாங்கள் கிருபாச்சாரியரிடம் கல்வி பயில்கின்ருேம்".

"நல்லது; இப்படி ஒரு பொருள் கிணற்றில் தவறி விழுந்தால் அதனை எளிதாக எடுக்கும் முறையை அவர் உங்களுக்குக் கற்பிக்கவில்லையா?"

"இல்லை"

நல்லது என்று கூறி துரோணர் அங்கு நிரம்ப முளைத்திருந்த சீவீரங் குச்சிகளை எடுத்து, அவைகளை ஒழுங்காகத் திருத்தினுர். பிள்ளைகள் எல்லாம் அவர் என்ன செய்யப் போகின்ருர் என்று உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

அர்ச்சுனன் காதில் அவர் ஒரு மந்திரத்தை உபதேசித்தார். அந்தச் சீவீரம் புற்களை அவன் கையில் தந்து, "அர்ச்சுனா! உனக்கு நான் உபதேசித்த மந்திரத்தை உச்சரித்து ஒவ்வொரு குச்சியையும் கிணற்றில் எறி" என்றார்.

அர்ச்சுனன் அம்மந்திரத்தைக் கூறி ஒரு குச்சியை எறிந்தான். அது ஆழத்தில் உள்ள பந்தில் நுழைந்தது. பின்னர் ஒவ்வொரு குச்சியையும் எறிந்தான். ஒரு குச்சி மறு குச்சியின் நுனியில் தைத்துக்கொண்டே வந்தது. மேலே வந்த குச்சியைப் பிடித்துத் தூக்கினான். பந்து வெளியே எடுக்கப்பட்டது. இந்த அதிசயத்தை எல்லாப் பிள்ளைகளும் பார்த்தார்கள். "அடே! இவர் ஒரு பெரிய மந்திரவித்தைக்காரர். மிகவும் சமர்த்தர், இவரை நாம் அலட்சியஞ்செய்தோமே?" என்று கூறி, அவரைப் பணிந்து "சுவாமி! தாங்கள் யார்? எங்கு போகின்றீர்?" என்று கேட்டார்கள்.

துரோணர், "குழந்தைகளே! நான் துரோணர் என்கின்ற முனிவன்; உங்கள் குருநாதருடைய இல்லத்திற்குச் செல்கின்றேன்" என்று கூறிவிட்டுச் சென்றார்.

பிள்ளைகளின் வேண்டுகோளுக்கு இணங்கி பிஷ்மாச்சாரியர் துரோணரையும் அந்தக் குரு குலத்தில் ஆசிரியராக அமர்த்தி வில்வேதம் பயிற்றுவிக்குமாறு ஏற்பாடு செய்தார். இயல்பாகவே அடக்கமுடைய அர்ச்சுனன் துரோணரிடம் மேலும் அடக்கமாகப் பலப் பல பணிவிடைகள் புரிந்து அவருடைய

மனத்தை மட்டற்ற மகிழ்ச்சியில் ஆழவைத்தஎன். குருவுக்கு உகந்த சீடஞக விளங்கி, வில் வித்தையில் சமானமில்லாதவஞக ஆஞன். அர்ச்சுனனுடைய முன்னேற்றத்துக்கு மூலகாரணமாக நின்று உதவியது அவனுடைய அடக்கமே.

அநுமார் சமானமில்லாத வலிமையுடையவர். அவர் ஸ்ரீராமரிடம் பேசும்போது, வணங்கிய உடம்புடனும் கையிஞல் வாயை மறைத்தும் பயபக்தி விசுவாசத்துடனும் நிற்பார்.

*''வணங்கிய மேனியன் மறைத்த வாயினன்*
*நுணங்கிய கேள்வியன் நுவல்வ தாயிஞன்.''*

*—வீடணன் அடைக்கலப்படலம்.*

அறிவு உயர உயர அடக்கம் மிகுதியாகவேண்டும். அடக்கம் அறிவின் மிகுதியைத் தெரிவிக்கின்ற ஓர் அடையாளம். சாரமும் ஈரமும் இல்லாத உலர்ந்த ஓலை சல சல என்று ஒலிக்கின்றது. பச்சோலை ஒலிப்பதில்லை. அன்றியும் வெண்கலமணி அதிகமாக ஒலிக்கும், தங்கமணி ஒலிப்பதில்லை. அதஞல் பச்சோலைக்கும் தங்கமணிக்கும் பெருமைதானே.

கம்பர், ஒட்டக்கூத்தர் புகழேந்தி,முதலிய பெரும் புலவர்கள் எத்துணை அடக்கமுடையவர்களாக இருந்தார்கள் என்பதனை அவர்களுடைய பாடல்கள் இன்றும் சான்று பகர்கின்றன.

இந்திரஜித்து போருக்குப் புறப்பட்டான். அவனுடன் சூழ்ந்து சென்ற சேனைகள் நாற்பது வெள்ளம்;

இவ்வளவுதான். இதனைக் கம்பநாடர் கூறுகின்ற அழகும் அடக்கமும் உன்னுந்தோறும் உள்ளத்தை உருக்குகின்றது.

"இந்திரஜித்துடன் சென்றசேனைகளை அளவிட்டுச் சொல்ல யாரால் முடியும்? பிரம்ம தேவராலும் முடியாது. ஆனால் வேதங்களில் வல்ல வால்மீகி முனிவர் நாற்பது வெள்ளம் சேனைகள் என்று கூறுகின்றார். அவரையன்றி அச்சேனையை அளவிட வல்லார் யாவர்?" என்று கம்பநாடர் முன்னோரை மதித்து அவர்களைப் பாராட்டிக்கூறும் அடக்கமுடைமை எத்துணை விழுமியது.

*அன்னனொடு போகிய தானை அறிந்து கூற*
*என்னால் அரிதேனும் இயம்புவான் மீகன் என்னும்*
*நன்னூன் மறையோன் அது நாற்பது-*
*வெள்ளமென்னச்*
*சொன்னான் பிறர் யார் அஃதுணர்ந்து-*
*தொகுக்கவல்லார்*

ஒரு சமயம் சோழமன்னன், பொய்யாமொழிப் புலவரைச் சந்தித்தான். "புலவரே!" என்று புரவலன் அழைத்தான். அது கேட்ட பொய்யாமொழிப்புலவர், உடம்பில் மின்சாரம் பாய்ந்ததுபோல் திடுக்கிட்டு உள்ளமும் உடலும் குலுங்கிப் பதறினார்.

மன்னவன் "ஓ! ஏதோ நாம் தவறாக அழைத்து விட்டோமோ? புலவர் மனம் புண்படக் கூடாதே" என்று கருதினான்.

புலவரைப் பூபாலன் தொழுது, "என்னை மன்னிக்க வேண்டும். "புலவர் பெருமானே" என்று அழைக்க வேண்டும். "புலவர் ஏறே" என்று அழைத்திருக்க வேண்டும். நான் அடையின்றி வெறுமனே 'புலவரே' என்று அழைத்துவிட்டேன். மன்னித்தருளும்" என்றான்.

பொய்யாமொழிப்புலவர் முன்னைக்காட்டிலும் பன்மடங்கு நடுக்கமுற்றனர். "மன்னர் பெருமானே! மற்றும் ஒரு முறை இப்படி அழைக்கவேண்டாம். இப்படி அழைப்பது எனக்கு மிகுந்த வேதனை தருகின்றது" என்றார்.

சோழமன்னருக்குப் புலவருடையசொற்பொருள் விளங்கவில்லை; அவருடைய கருத்தும் தெளிவாக வில்லை "புலவரே! நீர் என்ன கூறுகின்றீர் என்பதைத் தெளிவாகச் சொல்லும்" என்றார்.

"மன்னரே! மறுபடியும்மறுபடியும் என்னைப் புலவரே புலவரே! என்று அழைக்கின்றீரே! அறம் என்ற மகாபாரதத்தைப்பாடிய பெருந்தேவனாரையும் புலவர் என்று கூறி, அறம் பொருள் இன்பம் என்ற முப்பாலையும் கூறிய திருவள்ளுவரையும் புலவர் என்று கூறி, அகத்தியரையும் புலவர் என்று கூறி, அடியேனையும் புலவன் என்று கூறினால் இந்த உலகம் பொறுக்குமா?" என்று கூறிக் கண் கலங்கி நின்றார். அப்போது அவர் கூறிய பாடல் இது.

அறம்உரைத் தானும் புலவன்முப் பாலின்
திறம்உரைத் தானும் புலவன்—குறுமுனி
தானும் புலவன் தரணி பொறுக்குமோ
யானும் புலவன் எனில்.

இந்தப் பாடலை நன்கு படியுங்கள். சாபானுக்கிரக சக்தியுடைய அப்பெரும் புலவருக்கு இந்த அடக்கம் இருந்தது.

கற்றறிவு குலமேன்மை கருணை பெரும் புகழ்
செல்வம் கைம்மா றெண்ணு
துற்றதுவுங் கொடை சீர்மை ஒழுக்க மருந்
தவம் நியமம் உறவின் கேண்மை
மற்றெதிரி லாத்திண்மை வாய்மைமிகும்
தூய்மை குண வனப்பி யாவும்
பெற்றிடினும் அடக்கமிலாப் பெருமிதத்தால்
இத்தனைக்கும் பிழையுண் டாமால்.

—பிரபோதசந்திரோதயம்.

அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்.

—திருக்குறள்.

———

உ

முருகா

# 17. இகழ்ச்சி

உலகத்திலே எது இகழ்ச்சி என்று அறிவாளிகள் உள்ளத்தில் ஒரு வினு எழுவது இயல்புதானே. அதற்கு விடை தெரிந்துவிட்டால் அந்த இகழ்ச்சி யான செயலே நாம் செய்யாமல் இருக்கலாம்.

வீடு கூட்டுவது, பாத்திரம் விளக்குவது, ஆடை தோய்ப்பது என்ற இந்த தொழில்களை நமது வீட்டில் ஒருவன்—ஒருத்தி செய்கின்றனர். இவை இழிந்த னவா? எனச் சிந்தித்தேன். அவைஉயர்ந்ததொழில்கள். வீடு கூட்டவில்லையாளுல் எத்துணை அருவருப்பாக இருக்கும். விளக்காத பாத்திரத்தில் எப்படித் தண்ணீர் பருகமுடியும்? தோய்க்காத துணியை உடுப்பது எத்துணை சுகக்கேடு? ஆதலால் இவை யெல்லாம் இழிந்த தொழில்கள் ஆகமாட்டா. தூய்மை புரியும் இனிய செயல்கள் இவை.

நமது வீட்டில் வேலைக்காரன் உணவு சமைத்துத் தருகின்ருன்; படைக்கின்ருன். உணவு மனிதனுக்கு இன்றியமையாதது, உயிர்நாடி போன்றது. உண வின்றி உயிர்வாழ்க்கை இயங்காது. அதனுல் திருவள் ளுவரும் தமது வாழ்க்கைத் துணைவியாரின் பிரிவு

குறித்து வருந்துகின்றபோது "அடிசிற் கினியாளே" என்று முதலில் உணவைக் குறித்துக் கூறினார். நளச்சக்கரவர்த்தி வீமன் முதலிய மன்னர்களும் உணவு சமைக்கும் இனிய தொழிலைப் புரிந் தார்கள்.

ஒருநாள் தஞ்சையில் எனது நண்பரின் இல்லத் தில் தங்கியிருந்தேன், காலையில் திண்ணையில் அமர்ந்து பல்குச்சியிட்டு பல் துலக்கிக்கொண்டிருந்தேன். ஒரு பெண்மணி சந்துவழியே சென்று மலம் அள்ளிக் கொண்டு சென்றனர். இதைக் கண்டதும் என் மனம் உருகியது. "பாவம்! இந்த அம்மை தன் வயிற்றை வளர்க்கும்பொருட்டு நினைக்கக்கூட அருவருப்பாக வுள்ள இந்த மலங்களை அள்ளிக் கூடையில் வைத்துத் தலையில் சுமந்து கொணடு செல்லுகின்றனரே! பரி தாபம்" என்று என்மனம் எண்ணி மிகுந்த இரக்க முற்றது. அப்போது கண்ணீர்த்துளி சிந்தியது. நான் இந்த உலகையே மறந்து இருந்தேன்.

எனது நண்பர் வெளியே வந்து என்னைக் கண்டார். "ஏன் சுவாமி? அழுகிறீர்?" என்று என்னைக் கேட்டார்.

நான் "ஒன்றுமில்லை, அதோ செல்லுகின்ற சகோதரி மலத்தை அள்ளிச் சுமந்து போவதைக் கண்டு ஒரு சாண் வயிற்றை வளர்க்கும்பொருட்டு இந்த இழிதொழிலைப் புரிகின்றனரே என்று நினைத்து என் மனம் குழைந்து உருகிற்று" என்றேன்.

அவர் சொன்னார். "சுவாமி! எனது ஆசிரியர் இது பற்றி எனக்கு ஒருநாள் சொன்னார். இது இழிதொழிலன்று, புனிதமான அன்புத் தொழில். நமது தாயார் நமது மலத்தை அள்ளினாள் அல்லவா? தன் குழந்தை மலத்தை அன்னை அன்பினால் அள்ளுகின்றாள். இந்தப் பெண் இந்த வீட்டில் உள்ள அனைவர்களையும் தனது மக்களாக நினைத்து அத்தனை பேர் மலங்களையும் அள்ளுகின்றாள். இது தூய்மை கலந்த தாய்மையில் செய்யும் புனிதத் தொழில். மலம் அள்ளுகின்ற பெண்ணை வீட்டில் உள்ளவர்கள் தாயாக நினைத்து அன்புடன் பாராட்டவேண்டும் என்று என் ஆசிரியர் என்னிடம் கூறினார்" என்றார். இந்த அரிய கருத்தைக் கேட்டவுடன் எனக்கு மிக்க மகிழ்ச்சியுண்டாயிற்று. ஆ! ஆ! என்ன அற்புதமான கருத்து? மலம் எடுக்கும் தொழிலின் புனிதத்தை யுணர்ந்தேன் என்று அன்று நான் கருதினேன். ஆகவே மலசுத்தி செய்யும்தொழில் கூட இழிந்ததன்று.

இனி இழிந்த தொழில் எது? என்று ஆழமாகச் சிந்தித்தேன். ஒருவரிடம் சென்று ஒரு பொருளை யாசிப்பதுதான் இழிந்தது என்று முடிவு கட்டினேன்.

*ஆவிற்கு நீரென் றிரப்பினும் நாவிற்*
*கிரவின் இளிவந்த தில்.*

எளிய பொருளாகிய தண்ணீரை, யாரும் போற்றக் கூடிய பசுவிற்கு வேண்டும் என்று கேட்பதும் மிகவும் இழிவு என்கின்றார் திருவள்ளுவர்.

**தெண்ணீர் அடுபுற்கை யாயினும் தாள்தந்த**
**துண்ணலின் ஊங்கினிய தில்.**

தெளிந்த தண்ணீர் போன்ற புல்கஞ்சியானாலும் உழைப்பால் வந்த அந்த உணவே மேலான அமுதம் போன்றது. ''போனகம் என்பது தானுழந் துண்டல்'' என்கின்றார் ஔவையார்.

கையில்லாத ஆடு மாடுகள் எல்லாம் உழைத்துத் தேடித் தம் பெருவயிற்றை நிரப்பிக் கொள்வதைக் கண் கூடாகப் பார்க்கின்றோம் நாம். கையும்கருத்தும் படைத்த நாம் உழைத்து நம் சிறுவயிற்றைத் திருப்தி செய்ய முடியாதா?

ஒருவன் இரவச்சத்தை நன்கு உணர்ந்தவன். உழைத்து உண்ணும் உரமுடையவன். எங்கும் தொழில் கிடைக்கப்பெறாது உலைந்தான். அலைந்தான். பட்டினியால் வாடினான். உயிர் துடிக்கும் நிலை வந்தது. தள்ளாடிக்கொண்டு சென்றான். ஒருவர் திண்ணையில் அமர்ந்து பாசிப் பயறு சுண்டல் உண்டு கொண்டிருந்தார். கேட்டு வாங்கி யுண்ணுது உழைத்து உண்ணும் கொள்கையுடைய அவன், ஆபத்கால தருமமாக 'ஐயா! சிறிது உணவு கொடும்' என்றான்.

உடனே இரண்டுபிடி சுண்டலைத் தந்தார். அதனை அவன் உண்டான். விக்கல் வந்தது. வீட்டுக்காரன் ஓடித் தண்ணீர் கொணர்ந்து நீட்டினான். விக்கல் கொண்டவன், ''யான் யாசித்து நீர் பருகமாட்டேன்'' என்றான்.

வீட்டுக்குரியவன், "என்னய்யா! சுண்டல் யாசித்து உண்டீரே" என்று வினவினர்.

"உயிர் துடித்தது; ஒழிபியல்போல் உயிருக்கு இறுதி வருந் தருவாயில் வேறு செயலின்றி யாசித்தேன். இரண்டுபிடி சுண்டல் உண்டதனுல் சிறிது நடக்கக் கூடிய வலிமை வந்துள்ளது. அதோ தெரிகின்ற குளத்தில் நடந்து சென்று நீர் பருகுவேன். உடம்பில் வலிமை யுள்ளபோது யாசித்து நீர் குடிக்க வேண்டாமே?" என்று கூறிக் குளத்தை நோக்கி அவன் நடந்தான். இதனுல் யாசிப்பதன் இழிவு நன்கு புலனுகின்றது அல்லவா?

ஒரு புலவரை ஒருவன்நோக்கி, "புலவரே!உலகில் அற்பமான பொருள் யாது" என்று கேட்டான்.

புலவர்—"துரும்பு"

"துரும்பினும் அற்பமான பொருள் உளதோ?"

"உளது, துரும்பினும் அற்பமானது பஞ்சு"

"ஓ! பஞ்சினும் அற்பம் இருக்கின்றதா?"

"ஐயா! இருக்கின்றது. பஞ்சினும் மிக அற்பமானவன் பொருள் யாசிப்பவன்".

"என்னையா! நீர் கூறுவது பொருத்தமாக எனக்குத் தோன்றவில்லை. யாசிப்பவன் பஞ்சினும் அற்பமானவன் என்றுல், பஞ்சைக் காற்று அடித்துக் கொண்டு போகின்றதே. யாசிப்பவனை ஏன் காற்று

அடித்துக்கொண்டு போகவில்லை'' என்றான். அதற்குத் தக்க காரணம் உண்டு. 'பஞ்சினும் அற்பமானவனை நெருங்கினால் நம்மை ஏதாவது யாசிப்பான் என்று அஞ்சி காற்று அவன்பால் செல்வதில்லை'' என்றார் புலவர்.

நொய்தாந் திரணத்தில் நொய்தாகும் வெண்பஞ்சு
நொய்தாம் இரப்போன் நுவலுங்கால்-நொய்தான்
பஞ்சுதனில் நொய்தானைப் பற்றுதோ காற்றணுக
அஞ்சுமவன் கேட்ப தறிந்து.

எத்துணை வறுமை வரினும் பிறரிடஞ் சென்று யாசிப்பது கூடாது என்று வறுமையின் உச்சியில் வாழ்ந்த குசேலமுனிவர் உறுதியுடன் இருந்தார். அவர் வயல்களில் உதிர்ந்த நெல்லைப் பொறுக்குந் தொழில் (உஞ்சவிருத்தி) புரிந்து தன் குடும்பத்தைக் காப்பாற்றினார். கண்ணனிடம் கூடத் தன் வறுமை நிலையைக் கூறி யாசித்தாரில்லை.

வறிஞர்க்கழகு வறுமையிற் செம்மை. உத்தம மானவன் கடவுளிடம்கூட அதனைக்கொடும், இதனைக் கொடும் என்று யாசிக்கமாட்டான். கடவுளைக்கூடும் அன்பினில் கும்பிடுவானே யன்றி வீடும் வேண்டா விறலின் விளங்குவான்.

ஒரு பொருளை யாசிப்பவன் எத்துணைப் பெரியவனாயினும் குன்றிவிடுவன் என்ற நுட்பத்தை உலகிற்கு உணர்த்தும் பொருட்டே நெடியோனாகிய திரு நெடுமால் மாவலியிடம் மூவடி மண் தானங் கேட்கச் சென்றபோது குள்ளனாகச் சென்றார்.

ஒரு பெண்மணியின் அழகு ஒரு மகவைப்பெற்ற உடனே குன்றிவிடும். அதுபோல் பெரியோர் பெருமை ஒருபொருளைப் பிறரிடஞ் சென்று கேட்ட வுடனே கெட்டுவிடும்.

கற்றைக் குழலார் கவினெல்லாம் ஓர்மகவைப்
பெற்றக் கணமே பிரிந்திடுமே—கற்றருளை
வேட்ட பெரியோர் பெருமையெலாம் வேறொன்றைக்
கேட்ட பொழுதே கெடும்.

ஆகவே உலகிலே மிகவும் இழிவானது தனக்கு என்று ஒன்றை ஏற்பதுவேயாகும்.

இத்தனைக் கருத்துக்களையும் அமைத்துச் சுருங்கக் கூறுவதில் மிக வல்லவரான ஔவைப் பிராட்டியார் ஏற்பது "இகழ்ச்சி !" என்று இரண்டே சொல்லில் கூறிவிட்டார்.

---

உ
முருகா

# 18. துன்பம் துடைக்கும் வழி

உலகிலே எல்லாரும் துன்பம் இல்லாமல் இருக்க வேண்டும் என்றுதான் எண்ணுகிறார்கள். ஆனால் ஒருவராவது துன்பம் இல்லாமல் இருக்கின்றார்களா? ஏன்? துன்பத்தைத் துடைக்கும் வழி யறியாது மன்பதைகள் துன்பத்தால் துடிக்கின்றன. அந்தோ ! பரிதாபம்! இந்த அவல நிலையை நன்கு சிந்திப்பது நமது முதற்கடமை. துன்பத்தைத் துடைக்கும் தூயவழியை இனைத்தென திட்டவட்டமாக முடிவுகட்டுவதே அறிவுடைமையாகும்.

பெரும்பாலான மக்கள், பொருள் சேர்த்து விட்டால் துன்பமின்றி வாழலாம் என்று கருதி இரவு பகலாகப் பொருளீட்டுவதிலேயே கண்ணுங் கருத்துமாகக் காலங் கழிக்கின்றார்கள்; பொருள் நிரம்பவும் ஈட்டித் தொகுக்கின்றார்கள். அங்ஙனம் நிரம்பிய தனவந்தர்கள் துன்பின்றி இன்புறுகின்றார்களா? இல்லை இல்லை. அவர்கள் கொள்ளித்தலை யெறும்பாக மிகுந்த துன்ப நிலையில் துடித்து மடிகின்றார்கள்.

ஒரு புகைவண்டி நிலையம். ஒருவன் அங்கு ஒரு இரவு பரம சாந்தமாகப் படுத்துக் கவலையின்றி உறங்கு

கின்றான். அப்படி உறங்கிய அதே ஆள். பதினாயிரம் ரூபாய் மடியில் கட்டிப் படுத்தான். அமைதியாக உறங்குவானா? உறக்கம் வருமா? ஆறுதல் இருக்குமா? அவன் இருந்த வண்ணமாக ஆந்தை மாதிரி விழித்துக்கொண்டு இருப்பான். போகின்றவரும் வருகின்றவரும் அவன் கண்ணுக்குக் கள்வராகவே காட்சியளிப்பர். விடிய விடிய உறங்காது விழித்திருப்பான்.

அன்றியும் வீட்டில் ஐம்பதினாயிரம் ரூபாயைப் பெட்டியில் வைத்துப் படுத்தான். எலியோ பூனையோ ஓடினாலும், திடுக்கிட்டு எழுந்து. கள்ளனோ? என்று ஐயுற்று விளக்கேற்றி வீடு சந்து தோட்டந் துரவு முழுவதும் பார்த்து மனம் பதைப்பான். பாவம் நன்கு அமைதியாக இருந்த அவனுக்கு அப் பணம் வந்து அமைதியை அழித்துவிட்டது.

ஒரு பெரிய பாங்கில் போட்டு வைத்தால் நிரம்ப வட்டி வராது; சிறிய பாங்கு என்றால் வட்டி கூடுதலாக வரும், ஆனால் அது நடுவில் உடைந்து போகுமோ என்று அஞ்சுவான். வட்டிக்கு ஆசைப் பட்டு வெளியில் தந்துவிட்டு திரும்பி வருமோ வராதோ என்று கவல்வான். தன்மக்கள் பணத்தை ஊதாரிகளாகச் செலவழித்து விடுவார்களோ? என்று எண்ணி ஏங்குவான். இங்ஙனம் பணத்தால் படுகின்ற பாடு ஒன்றல்ல; இரண்டல்ல; பல.

ஆகவே பொன்னை ஈட்டும்போதும் துன்பம். அதனைக் காக்கும்போதும் துன்பம், அது நம்மை விட்டு நீங்கும்போதும் துன்பம். பொன்னால் இன்பம்

பெறுவோம் என்று எண்ணுவது, நெய்யால் நெருப் பணைப்போம் என்று எண்ணுவதற்குச் சமானம்.

பலர் பெண்ணுல் துன்பின்றிஇன்புறலாம் என்று எண்ணுகிருர்கள். திருமணம் ஆவதற்கு முன் மாண வர்களாகப் பள்ளியில் படித்தபோது இருந்த இன்பத் தில் கல்யாணம் ஆனபின் ஆயிரத்தில் ஒருபங்குகூட இல்லை என்பதை அநுபவசாலிகள் அறிவார்கள். மனைவிக்குப் புடவை யென்றும் நகை யென்றும் பண்டமென்றும் வாங்கித் தந்தும் அவர்கள் திருப் திப்படாமல் முகஞ் சுளிக்க இடர்ப்படுவார் பலர்.

"நிட்டையிலே யிருந்து மனத் துறவடைந்த
பெரியோர்கள் நிமலன் தாளைக்
கிட்டையிலே தொடுத்து முத்தி பெறுமளவும்
பெரியசுகங் கிடைக்குங் காம
வெட்டையிலே மதிமயங்கிச் சிறுவருக்கு
மணம்பேசி விரும்பித் தாலிக்
கட்டையிலே தொடுத்துநடுக் கட்டையிலே
கிடத்துமட்டுங் கவலை தானே."

என்கின்ருர் சிவப்பிரகாச சுவாமிகள்.

அடுத்துப் புதல்வர்களால் சுகம் என்கின்ருர்கள் சிலர்.

"மதலையைப் பெறுநாள் துன்பம்
வளர்த்திடு நாளுந் துன்பம்
விதலைநோ யடையில் துன்பம்
வியன்பருவத்தும் துன்பம்

கதமுறு காலர் வந்து
கைப்பற்றில் கணக்கில் துன்பம்
இதமுறு பாலர் தம்மால்
எந்நாளும் துன்ப மாமே."

என்பது குசேல உபாக்கியானம்.

குழந்தை யில்லை யென்று முதலில் துன்பம். குழந்தை பிறக்கும்போது தாயும் தந்தையும் படுகின்ற வேதனைக்கு எல்லை ஏது? குழந்தை நோய்வாய்ப் பட்டால் பெருந்துன்பம். அது வளர்கின்ற போதெல் லாம் துன்பம்; அது படியாது தடிமாடாய்த் திரிந்தால் துன்பம்; தீயவரோடு திரிந்து அடங்காது அலைந்தால் துன்பம்; கல்வியில் தேர்ச்சிபெருதவழி துன்பம். தாங்கள்தேடிய பெண்ணை மணக்க அவன் உடன் படாது, தானே குலநலம் ஒவ்வாத ஒருத்தியை மணந்துகொண்டால் பிதா மாதாக்கள் படுகின்ற அல் லலுக்குத்தான் அளவு உண்டா? அடங்காப் பிடாரி யாகத் திரிந்து, தாம் அரிதில் தேடிய பொருளை ஓட் டாஞ்சல்லியாக அவன் செலவழிப்பதைக் கண்டு கலங்குவோர் எத்தனைபேர்? இனி புதல்வர் மாண்டு விட்டால் எல்லையற்ற துன்பம். இவ்வாறு மக்களால் மட்டற்ற துன்பந்தான்; இன்பம் இல்லை.

அதேபோல் நிலபுலம் அதிகம் வாங்கி வைத் தோர்க்கும் பயிரிடும் பரிசனங்களால் துன்பம்; மழை பொழியவில்லையாளுல் துன்பம்; பூச்சிகளால் பயிருக் குச் சேதம் வரின் துன்பம். அரசாங்கத்தார் நிலவரி

வருமானவரி முதலிய வரிகளை அதிகம் இடும்போதும் துன்பம்.

இப்படியே நல்ல பட்டு உடுத்து இன்புறுவோம் என்பார்க்கு, அப் பட்டாடைகளை எலி கடித்தால் துன்பம். அது ஆணிகளில் மாட்டிக் கிழிந்தால் துன்பம், பிறர் களவு புரிந்துவிட்டால் துன்பம். குடை செருப்பு இவைகளால் இன்புறுவோம் என்போர் அவை காணுமல் போனபோது துன்புறுவார்கள். நமது வாழ்வில் எண்ணில்லாத துன்பங்கள் இருளுக்கிடையே சிறிது மின்னும் பூச்சி பளிச்சிடுவதுபோல், இனிய உணவாலும் பஞ்சணையாலும் அணுவளவு இன்பத்தை மக்கள் நுகர்ந்து மயங்குகின்ருர்கள். அந்தோ பரிதாபம்! பரிதாபம்!

ஒரு மனிதன் காட்டுவழியேசென்றுகொண்டிருந்தான். ஒரு பெரிய மதயானை அவனைத் துரத்திக்கொண்டு வந்தது. அவன் யானையைக் கண்டு அஞ்சி நடுங்கி ஓடினன். யானையும் விடாது விரட்டியது. ஒரு ஆழ்ந்த குழியில் வீழ்ந்தான். அங்ஙனம் வீழ்ந்தவன் இடையில் நார்கொண்ட கொடி யொன்றைப் பற்றித் தொங்கினன். அந்த ஆழ்ந்த குழியில் ஒரு கருநாகம் கடிக்கும்பொருட்டு வருகின்றது. அவன் பிடித்திருந்த கொடி உறுதியாக உளதா என்று கொடியின் அடியை உற்று நோக்கினன். கருப்பு எலி வெள்ளெலி என்ற இரு எலிகள் மாறி மாறி கொடியின் வேரைக் கடித்துக் கொண்டிருந்தன. யானையும் மேலே தும்பிக்கையை நீட்டி அவனைத் தூக்க முயன்

றது. தலையை வளைத்துக்கொண்டான். யானையின் தும்பிக்கைக்கும் அவன் தலைக்கும் நான்கு விரற்கிடை. கருநாகம் கீழே சீறுகின்றது. காலை முடக்கிக்கொண்டான். காலுக்கும் கருநாகத்துக்கும் நாலு விரற்கிடை. கீழே ஆழ்ந்தகுழி. பிடித்திருப்பது கொடி. இந்த ஆபத்தான நேரத்தில் அங்கு மூலையில் இருந்த தேன்கூடு சிறிது உடைந்து, ஒவ்வொரு துளியாகத் தேன் சிந்தியது. இத்தனைத் துன்பத்துக்கும் இடையில் அத் தேன் துளியைச் சுவைத்து இத் துன்பங்களை யெல்லாம் மறந்து அந்த அறிவில்லாத அசடு இன்புறுவானாயினான்.

யானை என்பது காலன். காலன் ஒருபுறம் துரத்துகின்றான். ஆழ்ந்த குழி நரகம், அங்கே உள்ள கருநாகம் காலபாசம். பிடித்துத் தொங்குகின்ற கொடி பந்தபாசம். அந்தக் கொடியின் வேரைக் கடிக்கின்ற கருப்பெலி வெள்ளெலி, நமது வாழ்நாளை அழிக்கின்ற இரவு பகல். மாறி மாறி வந்து வாழ்நாளை யருந்துகின்றன. இதற்கிடையில் அயிற்சுவையும் துயிற்சுவையும் அற்பமான தேன் துளி.

இந்த அரிய கருத்து சூளாமணி யென்ற காவியத்தில் விளக்கமாக உணர்த்தப்படுகின்றது.

*ஆனை துரப்ப அரவுறை ஆழ்குழி*
*நானவிர் பற்றுபு நாலும் ஒருவனோர்*
*தேனின் அழிதுளி நக்குந் திறத்தது*
*மானுடர் இன்பம் மதித்தனை கொள் நீ.*

ஆகவே மனிதனுடைய வாழ்வில் துன்பமே மலிந்துள்ளது. இந்திரனுக்குப் பகக் குறி, குபேரனுக்கு ஒரு கண் ஊனம்; சூரியனுக்குப் பல் ஊனம்; சந்திரனுக்குக் காசநோய்; இயமனுக்குப் புழுக்கால்; சனிக்குக் கால் முடம்; பிரம்மாவுக்கு நடுத்தலை யறுபட்டது; திருமாலுக்கு இளைய புதல்வன் எரிந்து சாம்பரானன், இவ்வாறு இம் மண்ணுலகமே யன்றி விண்ணுலகத்திலுந் துன்பந்தான். அரசனுந் துன்புறுகின்ருன்; ஆண்டியுந் துன்புறுகின்ருன்.

சந்திரனுக் குடலூனந் தனதனுக்கோர்
கண்ணூனம் தருவின் நீழல்
இந்திரற்கோ பகக்குறியாம் இயமனுக்கோ
புழுக்காலாம் இரவியீன்ற
மைந்தனுக்கோ கால் முடமாம் வனசனுக்கோர்
தலைக்குறையாய் வாழ்வராஞல்
பந்தமுள மானிடரை விதிவிடுமோ
ஆலவாய்ப் பதியுளானே.

இனி இத் துன்பம் நீங்க வழியே இல்லையா? உண்டு.

அதனை நுனித்து உணர்க் துன்ப நீக்கத்துக்கு வழி திருவள்ளுவர் கூறுகின்ருர்.

"அவாவில்லார்க்கில்லாகுந் துன்பம் அஃதுண்டேல்
தவா அது மேன்மேல் வரும்."

ஆசையில்லார்க்குத் துன்பம் இல்லை; ஆசையுடையோர்க்குத் துன்பம் அடுக்கடுக்காக வந்து கொண்டே யிருக்கும்.

"இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்
துன்பம் உறுதல் இலன்-"

மற்றும் அவர் கூறுகின்றார்.

"நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்."

துன்பத்துக்கு மூலகாரணம் ஆசை. ஆகவே காரணம் இன்றிக் காரியம் நிகழாது. காரணமாகிய ஆசையை அறுத்துவிட்டால் காரியமாகிய துன்பம் நிகழ வழியில்லை. சர்க்கரை யில்லை யானால் அங்கு எறும்பு வராது. ஆசையான சர்க்கரை யிருந்தால் துன்பங்களான எறும்புகள் வந்து சேரும்.

வீடு என்ற சொல்லுக்கு ஆசையாகிய சங்கிலியி லிருந்து விடுபடுதல் என்பது பொருள். வீடு என்பது விடு என்ற முதல் நிலை நீண்ட தொழிற்பெயர்.

"தூசா மணியுந் துகிலும் புனைவாள்
நேசா முருகா நினதன்பருளால்
ஆசா நிகளந் துகளாயினபின்
பேசா அநுபூதி பிறந்ததுவே."

என்கின்றார் அருணகிரிநாதர். நிகளம் சங்கிலி; ஆசை யாகிய சங்கிலியால் நாம் கட்டுண்டு கவலைப்படுகின் றோம். அந்த ஆசாநிகளம் ஆண்டவன் அருளால் தான் அறுபடும். ஆதலால் அப் பரம கருணாநிதியை வேண்டி துதி செய்து, அன்பு செய்ய வேண்டும். நாம் அப்பரமன்மீது அன்புவைக்க வேண்டும். அவன் நம்மீது அருள் வைப்பான். அன்பால் வருவது

அருள். எனவே துன்பத்தைத் துடைக்கும் வழி யாது? இறையருளால் உண்டாகும் அவாவின்மை யாகும்.

அவாவுடைய இந்திரன் காடு சென்று கவலைப் பட்டான்; அமராவதி நகர் எரிந்து கரிந்தது. இந்திரன் மகன் சயந்தன் முதலியோர் சிறைப்பட்டுக் குறை பட்டார்கள். ஆதலால் ஆண்டவன் அருளால் வரும் வீடு என்ற ஒன்றை யன்றி துன்பத்தைத் துடைக்க வழி ஒன்று உளதோ?

காடு போந்தனன் இந்திரன் பொன்னகர் கரிந்து
பாடு சேர்ந்தது சயந்தனும் சிறையிடைப் பட்டான்
நாடில் விண்பதச் செய்கை எம்பெருமான் நல்கும்
வீட தேயலால் துன்பறு மார்க்கம் வேறுண்டோ?

—கந்தபுராணம்.

ஆசையை அகற்றுதலே துன்பத்தைத் துடைக்கும் வழி என உணர்ந்தோம். ஆசையை ஒரேயடியாக அகற்ற முடியுமா? அதனைச் சிறிது சிறிதாக அகற்ற வேண்டும்.

கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்
றுய்வாய் மனனே ஒழிவாய் ஒழிவாய்
மெய்வாய் விழிநாசியொடுஞ் செவியாம்
ஐவாய் வழி செல்லும் அவாவினையே.

“ குருவாய் வருவாய் அருள்வாய் குகனே ”

முற்றிற்று,